# அருள்

சங்கத் தமிழ் மூன்றும் தா !



ஸ்ரீ சிந்தாமணி விநாயகர்
ஆழ்வார் திருநகர்







தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாபி பங்குனி (14-3-73) [கருணை 6

இசைப்பாடல்

## சிந்தாமணி விநாயகனே!

இராகம் : ஹம்ஸத்வனி தாளம் ; ஆதி

### பல்லவி

சிந்தாமணி விநாயகனே! சரணம்!
சென்னைநல் ஆழ்வார் திருநகர் வாழும்ஸ்ரீ —(சிந்தாமணி)

### அநுபல்லவி

சந்தான சௌபாக்கிய சகலசம்பத்தருளும்
சர்வேச்வரனும் சங்கரன் மகனே! —(சிந்தாமணி)

### சரணம்

சிந்தித்த நலந்தரும் சிவசக்தி புதல்வா!
சிவகுகன் மணந்தரும் செழுங்குண முதல்வா!
வந்தனை செய்துனை வாழ்த்திநின் றேமே!
வல்வினை யாவும் வாட்டிவென் றேமே! —(சிந்தாமணி)

இயற்றியவர் : அருளிசைக் கவிஞர் என். எஸ். சிதம்பரம்

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

● நல்லது எது வந்தாலும் உடனே ஒரு கொண்டாட்டம் கொண்டாடி நம்முடைய சக்தியாலே இது வந்தது என்று நினைத்துவிடுவதால் அகம்பாவம் தான் வந்து சேரும். அப்படி அகம்பாவம் வந்துவிடுவதால் இன்னும் வீணாகப் போகிறார்கள்.

● மகாத்மா காந்தி அடிகளின் "தர்ம கர்த்தா" தத்துவத்தை வாழ்க்கையில் நடத்திக் காட்டிய உத்தமர் ஜம்னாலால் பஜாஜ். தன்னை மகாத்மாவின் ஐந்தாம் புத்திரனாக ஏற்கும்படி வேண்டினார். அப்படியே மகாத்மாவும் ஏற்று அவரை நடத்தினார்.

● இறைவனுக்கு ஆறு பண்புகள் உண்டு. மங்கலம், நிறைவு, இளமை, இடர் களைதல், ஆற்றல், பேரொளி என்பனவாகும்.

● பதிமூன்றாவது நூற்றாண்டு கண்டெடுத்த மாபெரும் சமயாசாரியார், ஆனந்த தீர்த்தர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீமத்வாசாரியார்.

● ஹிந்துமத சமயாசாரியர்கள் மூவரில் முதலாவதாகத் தோன்றியவர் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள். கேரள மாநிலத்திலுள்ள காலடி என்னும் க்ஷேத்திரத்தில் கி. பி. 788 ஆம் ஆண்டில் அவதரித்தவர்.

● பசு, பட்சி இனங்கள் முதல் மனிதன் வரை உள்ள ஜீவராசிகள் அனைத்திற்கும் சமமான மதிப்பளித்து காத்து, உயர்த்தும் பணியை இந்து சமயம் மிகச்சிறப்பாகச் செய்கிறது வேறு எந்த சமயமும் அவ்வாறு சிறப்பாகச் செய்வதில்லை.

● காசிக்குப் பெருமை தரும் விசுவநாதருக்கு மூன்று கோவில்கள் உண்டு. புகழ்பெற்ற விசுவநாதர் பொற்கோவில், ஹரிஜன ஆலயப் பிரவேசத்தை எதிர்த்து உண்டான நயா மந்திர், பல்கலைக் கழகப் பகுதியில் பிர்லாமந்திர்.

● இந்தியா வெங்குமுள்ள ஏழை, எளியவர், காசிமா நகரில் தங்கி இலவச உணவு பெற்றுக் கல்வி பயில வாய்ப்பு நல்கும் பல சத்திரங்கள் காசிமாநகருக்குப் பொலிவும் சிறப்பும் தருகின்றன.

● அருள் நிறைந்த விரிந்த பார்வையால் இந்த உலகை ஆள்பவள் காஞ்சி காமாக்ஷி. மீன் போன்ற கண்களால் உலகைப் பார்ப்பதன் மூலமே உணவூட்டி உயிரூட்டிக் காப்பவள் மதுரை மீனாக்ஷி.

● குருவாயூர் கோயில் தமிழ் நாட்டுக் கோயில்களைப் போல் பிரம்மாண்டமான கோபுரத்தை உடையது அல்ல. ஒரு வீடு போலவே கூரையுடன் காணப்பட்டாலும் இங்கு தெய்வ ஒளி அதிகம். நெய்விளக்குகள் அடுக்கடுக்காய் எரிவது இந்தக் கோயிலின் ஒரு சிறப்பு இயல்பு.

● மூன்று ஆண்டுகளுக்கு முன்பு தமிழகத்துக் கோவில்களின் வரு

மானம் ரூபா 3 கோடியாக இருந்தது என்றும் இப்போது இது ரூபா 8 கோடியாக உயர்ந்துள்ளது என்றும் தமிழக அறநிலைய அமைச்சர் அண்மையில் கூறியிருக்கிறார்.

● உலகில் மக்கள் சமுதாயத்தில் ஆன்மீக வளர்ச்சிக்குச் சைவ உணவு முற்றிலும் தவிர்க்க முடியாதது. இந்து மதத்தின் சிறப்பான அம்சம் சைவ உணவும் சாத்வீக ஆகாரமும்தான்.

● அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்ற முதுமொழியில் அடங்கியுள்ள உண்மையை நான் முழுக்க முழுக்க நம்புகிறேன் என்று சொன்னார் மகாத்மா காந்திஜி அவர்கள்.

● கடவுள் சிரேஷ்டமானவர், கருணை நிறைந்தவர். தாங்க முடியாத அளவுக்குத் தம் அடியார்களை அவர் ஒருபோதும் சோதிக்க மாட்டார்.

● ஆசார்ய வினோபா பாவே அவர்கள் கீதைக்கு உரை எழுதிய கீதைப் பேருரைகள் என்ற புத்தகம் இதுவரை இருபது மொழிகளில் சுமார் பதினாறு லெட்சம் பிரதிகள் வெளியாகி விற்பனையாகி இருக்கிறது.

● அஹிம்ஸை என்பது செயலாற்றல் மிக்க வீரர்களுக்கு உரிய இலக்கணமாகும். கொல்லாமையுடன் இறப்பதற்கும் துணிவு தருவதாகும். கோழையுடன் அஹிம்ஸையை ஒரு போதும் தொடர்புறுத்த இயலாது.

● கதர் இந்திய விடுதலைப் போராட்டத்தின் சீருடையாகும். பிரிட்டிஷாரின் ஆலைத் துணிகள் இறக்குமதிக்குத் தடைக் கல்லாகவும், சுதேசித் தொழில்வளர்ச்சிக்கு ஒரு உறுதுணையாகவும் இருந்து பல்வேறு வகைகளில் அது உதவியிருக்கிறது.

● மதுவை விலக்கியவன் பொருளாதார நிலையில் உயருகிறான் என்பது மட்டுமல்ல, அவன் ஒரு மனிதனுமாகிறான். ஆகையால் மதுவை உண்ணும் பழக்கத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று காந்திஜி சொன்னார்.

● தெய்வ வழிபாட்டில் எத்தனையோ முறைகள் உண்டு. ஒரு கற்பூரத்தை ஏற்றி இறைவனுக்குப் படைத்து திருப்தி செய்விப்பதும் இதில் அடங்கும். இது அவரவர் மனப்பண்புக்கு ஏற்ற தனிப்பட்டமுறை. ஆயிரக் கணக்கில் ஜனங்கள் கூடும் கோயில்களில் பக்தர்களைக் கவரக் கூடிய ஆராதனை முறை அனுஷ்டிக்கப்படுகிறது. இந்த வகை ஆராதனையைத்தான் சோட சோபசாரம் என ஆகம சாஸ்திரம் கூறுகிறது

● சிறு வயதிலேயே கடவுள் பக்தி ஏற்படும்படி செய்ய வேண்டும். வயதாகிவிட்டால் பிரேமை முழுவதும் கடவுளிடம் வைக்க முடியாது. எறும்புபோல் பணிவும், சிறுமையும், விடாமுயற்சி

யுடனும் செயல்பட வேண்டும். சர்க்கரை கீழே சிந்திவிட்டால் எறும்பினுல்தான் அதைப் பொறுக்க முடியுமே தவிர யானையினுல் அது முடியாது.

● மனைவி வீட்டை அலங்கரிப்பவள். லக்ஷ்மிக்குச் சமம். அவளை உணவு, உடை, ஆபரணம் முதலியவைகளால் திருப்தி செய்வித்து, அவள் மனக்கசப்பில்லாமலும், கண்ணீர் விடாமலும் புன்னகையுடன் இருக்கும்படி செய்யவேண்டும். அந்த வீட்டில் அஷ்டலக்ஷ்மி வாசம் செய்வாள்.

● நமக்கு வாழ்க்கையில் சந்தோஷம் உண்டாக்குவது பணமும் அல்ல, வீடுவாசல், கார், பங்களாக்களுமல்ல, பெண்டு பிள்ளைகளுமல்ல. மனத்தை சாத்விகமாக வைத்துக்கொண்டு ஆத்ம திருப்தியுடன் பகவானைத் தியானிப்பது தான்.

● மஹான்கள் நினைத்தவுடன் சித்தியாவதற்கு அவரவர்களிடத்திலுள்ள எல்லை இல்லாத மனோ சக்தியே காரணம். அந்த மனோ சக்தியை அடைவதற்குக் காரணம் போதுமான அளவு, பஞ்சேந்திரிய கரணங்களை அடக்கி மனோபலத்தை பெறுவதும், அஹிம்ஸா தர்மத்தையும், சத்தியத்தையும் மேற்கொள்வதும், காமாதி விவகாரங்களை நீக்கி இருப்பதும்தான் காரணம்.

● இந்தியாவின் புனித க்ஷேத்திரங்களுள், குருவாயூர் போல வேறு எந்தத் தலமும் பாகவத புராணத்தைப் பாராயணம் செய்வதில் இவ்வளவு சிரத்தை கொள்வதில்லை.

● பலாத்காரம் நன்மை தருவதாகத் தோன்றினுலும் அது அளிக்கின்ற நன்மை தற்காலிகமானதுதான். அது செய்கின்ற தீமையோ நிரந்தரமானது. அதனுல்தான் நான் பலாத்காரத்தை ஆட்சேபிக்கிறேன் என்று சொன்னுர் மகாத்மா அவர்கள்.

● புகழ்பெற்ற தஞ்சை சரஸ்வதி மஹாலில் உள்ள நூல்களில் ஒரு பகுதி, சரபோஜி மன்னர் காசிக்குப் போயிருந்த போது அந்நகரில் அவர் சேகரித்தவை ஆகும்.

● தன்னை அடைந்தார்க்கு இன்பங்கள் தருவானுகிய இறைவன் தீராநோய் தீர்த்தருளும் பொருட்டு மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி, ஸ்ரீ வைத்தியநாதர் என்னும் திருப்பெயருடன் திருமேனி தாங்கி எழுந்தருளியிருக்கும் தலம் திருப்புள்ளிருக்கு வேளூர் என்பதாகும்.

● திருப்புன்கூர் என்னும் தலம் வைத்தீஸ்வரன் கோவிலுக்கு மேற்கே சுமார் ஒன்றரை மைல் தொலைவில் இருக்கிறது. தல விருட்சம் புங்கு. ஆதலால் திருப்புன்கூர் எனப் பெயர் பெற்றது. நந்தனுருக்காக நந்தி விலகிய தலம். இறைவன் திருநாமம் சிவலோக நாதர். இறைவி சொக்க நாயகி.

# ஞாயிற்றுக்கிழமையிலும்
# பாங்க் வசதி தரும் ஒரே வங்கி

சென்னை தியாகராய நகரில் தேசிய மயமாக்கப்பட்ட பல பாங்குகளின் கிளைகள் இருக்கின்றன தனியார் துறையினரின் பாங்குகளின் சில கிளைகளும் இருக்கின்றன. தனியார் துறை வங்கியான பாங்க் ஆப் மதுரை கிளை ஒன்று தி. நகர் வாணி மஹால் அருகில் தமிழக ஆளுநர் திரு கே. கே. ஷா அவர்களால் 12-11-72ல் திறந்து வைக்கப்பட்டு நல்லமுறையில் யாவர்க்கும் சேவை செய்து வேகமாக முன்னேறி வருகிறது.

மற்ற எல்லா பாங்குகளுக்கும் விடுமுறையான ஞாயிற்றுக்கிழமைகளில் இந்த பாங்க் ஆப் மதுரை தி. நகர் கிளை மட்டும் அன்றைய தினம் காலை, மாலை இரண்டு நேரங்களிலும் திறந்திருக்கிறது. இதனால் சிறுதொழில் அதிபர்களுக்கும், எளியவர்களுக்கும், ஆபிஸில் உத்தியோகம் பார்ப்பவர்களுக்கும் ஞாயிற்றுக்கிழமைகளிலும் மிக வசதியாக இரண்டு நேரமும் இந்த பாங்கின் சேவை கிடைக்கிறது.

இந்தத் தனியார் துறை வங்கி உண்மையிலேயே மிக எளியவர்களுக்கு வேலை கொடுத்தும் சிறுதொழில் அதிபர்களுக்கு உதவிகள் பல செய்தும் யாவரும் முன்னேற்றமடைய அருந்தொண்டு ஆற்றி வருகிறது.

எளியவர்களுக்குச் சேவை செய்வதையே இந்த வங்கி முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டு ஆகும். வங்கி நிருவாகத்தினரின் குறிப்பாக தலைவர் திரு. கிருஷ்ணன். மற்றும் அலுவலர்களின் தன்னலமற்ற சேவை யாவரின் பாராட்டுக்கும் இதனால் உரியதாகிறது.

வங்கியின் தலைவர் திரு. கிருஷ்ணன் அவர்கள், வங்கியின் வளர்ச்சி பற்றியே சதாசிந்தித்து, நண்பர்களுடன், வாடிக்கையாளர்களுடன், சக அலுவலர்களுடன் மிக நெருக்கமாகப் பழகி அவர்களுடன் கலந்து உரையாடி வேண்டியவற்றை வேண்டிய சமயத்தில் செய்து வங்கி உயர, பெருக, செழிக்க திட்டமிட்டு செயலாற்றி வருகிறார்கள்.

மக்கள் வாழ்வு நலம் பெற, வங்கி ஊழியர்களின் வாழ்வு மேலும் உயர, வணிகப் பெருமக்களின் வாழ்வு பெருக பல நல்ல திட்டங்களைக் கொண்டுள்ளார்கள்.

எனவே திரு. கிருஷ்ணன் அவர்களைத் தலைவராகப் பெற்றதில் வங்கியும், அதன் ஊழியர்களும், வணிகப் பெருங்குடியினரும், எளியவர்களும், மற்ற பொதுமக்களும் பாக்கியம் பெற்றவர்களே என்று கூறுவதில் தவறு ஏதும் இல்லை.

# ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் ஆலய நிர்மாணப் பணி



அருள் ராமநாதன்

விண்ணுக்கும் மண்ணுக்கும் நாதனாக விளங்குபவர் விநாயகர். வெவ்வினையை வேரறுக்க வல்லவரும் வேட்கை தணிவிப்பவரும் அவரே. சிந்தித்த செல்வமெல்லாம் தரும்போது அவர் சிந்தாமணி விநாயகர் ஆகிறார். அத்தகைய அருள்மூர்த்தி ஆலயம் கொண்டு விளங்கும் இடம் சென்னை ஆழ்வார் திருநகராகும்.

ஆழ்ந்த பக்திமிக்க, எழுச்சிமிக்க இளைஞர்கள் வாழ்ந்துவரும் புதுத்தலமே ஆழ்வார் திருநகர்! அத்திருநகரில் சிந்தாமணி விநாயகர் அன்பர்கட்கு அருள்பாலிக்க எழுந்த வரலாறே தனிச் சிறப்புடையது.

நாளுக்கு நாள் நல்ல வண்ணமும், வளர்ச்சியும் பெற்றுவரும் சென்னை மாநகரில், புதுப்புதுத் திருநகர்கள் பொலிவுடன் தோன்றிய வண்ணமிருக்கின்றன. அப்படிப்பட்ட திருநகர்களில், சென்னை வடபழநியை அடுத்த விருகம்பாக்கத்திற்கு அருகாமையில் அமைந்துள்ள ஆழ்வார் திருநகர் ஒன்றாகும்.

புதிதாக உருப்பெற்ற ஆழ்வார் திருநகரில், முதன் முதலாக முன்னவனான விநாயகப் பெருமாளின் பொற் கோயிலை எழுப்ப வேண்டுமென்று இவ்வூர் பொது நல மன்றம் முடிவு செய்தது. ஒற்றைக் கொம்பனுக்கோர் கோயில் உருவாக்குவதில் பலர் பாராமுகமாக இருந்தாலும், ஆலயம் கட்ட

வேண்டுமென்ற ஆலோசனையைப் பலமாக ஆதரித்து, இளைஞர் சிங்கங்களை மிகமிக உற்சாகப்படுத்தினர் சென்னை பச்சையப்பன் கல்லூரி வடமொழிப் பேராசிரியர் திரு. சண்முகமுதலியார்.

ஆழ்வார் திருநகரிலிருந்து இரண்டு மைல் தொலைவிலுள்ள வடபழநிக்குச் சென்றுதான். ஆழ்வார் திருநகர் அன்பர்கள் ஆண்டவனை வழிபட வேண்டியிருந்தது. சொந்தத் திருநகரிலேயே சுகிர்தம் அளிக்கும் இறைவன் கோயிலை எழுப்பினுல், ஊர் அன்பர்கள் அனைவரும் உத்தமனை வணங்கி, உயரிய நலன்கள் எய்தக் கூடும் என்ற எண்ணத்தின் விளைவாலே, ஆஸ்திக இளைஞர்களின் அயராத் தொண்டின் சிறப்பாலே சிந்தாமணி விநாயகர் ஆலயம் ஆழ்வார் திருநகரிலே அமைவதாயிற்று.

இந்த ஆலயம் எழுந்தபின், வடபழநிக்குச் செல்ல வேண்டுமே என்ற எண்ணமின்றி, எல்லையில்லாத பேரானந்தத்துடன் விநாயகப் பெருமானைத் தம் சொந்தத் திருநகரிலேயே துதித்து, அன்பர்கள் இகபர நலன்கள் எய்தி வருகின்றனர்.

தமிழ் நாட்டு முதலீட்டுக் கழகத்தின் அதிகாரி தெய்வச் சிந்தை

---



ஆழ்வார் திருநகர் ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் ஆலய நிர்மாணப் பணி துவக்க விழா 1-2-71

ஸ்ரீ M. பக்தவத்சலமும் ஸ்ரீ M. S. சாரங்கபாணி முதலியாரும் (முன்னுள் அறநிலைய ஆணையர்.)

படைத்த திரு, G. கோவரதன் அவர்கள் முதன் முதலாக நிதி யளித்ததன் மூலம் பிள்ளையார் சுழி போட்டவர்கள் ஆவர். எத்தியோப்பியா நாட்டில் இந்தியத் தூதுவராக இருந்த திரு. O. V. அளகேசன் அவர்கள் நிதி உதவி அளித்ததோடு அல்லாமல், ஸ்ரீ கணபதி ஸ்தபதி என்பவரைக் கொண்டு ஆலயம் கட்டலாம் என்ற ஆலோசனையையும் தெரிவித்தார்கள்.

ஸ்ரீ கணபதி ஸ்தபதி மஹாபலிபுரத்தில் உள்ள சிற்பக் கல்லூரி முதல்வராகப் பணியாற்றி வருகிறார். அவரை அணுகி ஆனைமுகவன் ஆலயம் கட்டுவது பற்றிக் கூறியபோது, அதற்கு இருபதினாயிரம் ரூபாய் செலவாகும் என்றார். ஆனால் கோயில் அமைக்கத் திட்ட மிட்ட இளைஞர்கள் நாலாயிரம் ரூபாய்க்குள் முடிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தார்கள்; அவர்களுக்கு ஸ்ரீ கணபதி ஸ்தபதி கூறிய தொகை பெருமலைப்பை உண்டாக்கி விட்டதென்றுதான் சொல்ல வேண்டும்.

முன்னவனாகிய, மூலாதார முதல்வனாகிய விநாயகப் பெருமான் திருவுளம் பற்றினால் முடியாத பொருளும் படிமிசை யுளதோ? அவனருளால் நிதி உதவி கிடைக்க ஆரம்பித்தது.

தமிழக இந்துமத அறநிலையப் பாதுகாப்பு ஆட்சித் துறையினர் 1969—1970 ஆண்டிற் குரிய கொடை நிதி (Grant) யிலிருந்து நிதி உதவி வழங்கியது இளைஞர்களிடையே பெருக்கத்தை அளித்தது. திருத்தணி தேவஸ்தானம்' பழநி தேவஸ்தானம், ராமேஸ்வரம் தேவஸ்தானம் முதலியன நிதி உதவி அளித்துள்ளன. பல தேவஸ்தானங்கள் நிதி உதவி தருவதாக வாக்களித்துள்ளன.

தமிழகத்திலுள்ள எல்லா ஆதீனங்கள் ஆசிவழங்கி இவ்விநாயகப்பெருமானுக்கு ஸ்ரீ சிந்தாமணி விநாயகர் என்று காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் திருநாமம் சூட்டி, மூர்த்திகரம் விளங்கச் செய்துள்ளார்கள்.

விநாயகர் ஆலயம் என்ற அளவோடு மட்டும் நில்லாமல், மஹாமண்டபம், நவக்கிரக மண்டபம், ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி உட்கோயில், மதில்சுவர், ராஜகோபுரம் முதலிய கட்டி முடிக்கத் தீர்மானித்து அதற்கான அரும்பணிகள் மேற் கொள்ளப் பெற்றுள்ளன.

ஈசன் மகனின் திருக்கோயிலை நேசமுடன் கட்டி முடிப்பதற்கு இலட்சம் ரூபாய் வரை தேவைப் படும் என கணிக்கப்பட்டுள்ளது. அதுவும் அவனருட் செயல்தான்.

1—2—1971 அன்று ஆழ்வார் திருநகர் விநாயகர் ஆலயத் திருப் பணியை முன்னாள் தமிழக முதல்வர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமையில், அறநிலைய ஆணையர் திரு. கே. எஸ். நரசிம்

மன் அவர்கள் ஆலய அடிக்கல் நாட்டி ஆர்வமுடன் தொடங்கி வைத்தார்கள்.

2—7—1972 அன்று ஆலயத்தின் பாலாலய கும்பாபிஷேகம் அன்றைய பிரதம மாகாண மாஜிஸ்திரேட் ஸ்ரீ S. நடராஜன், இந்துமத அறநிலைய துணை ஆணையர்கள் ஸ்ரீ K. ராஜா. ஸ்ரீ A. வெங்கடாசலம் ஆகியோரின் முன்னிலையில் மிகவும் சிறப்பாக, வெகு கோலாகலமாக நடைபெற்றது.

தமிழக ஆளுநர் திரு. கே. கே. ஷா அவர்கள் கோயில் மஹா மண்டபத் திருப்பணியை 11—9—1972 அன்று தொடங்கி வைத்து, ஞானமும், நம்பிக்கையும், அறிவும் இணைந்ததுதான் சமயம் ஆகும்என்று கூறினார்கள். மேலும் அப்போது அவர்கள் கூறிய கருத்து சிந்தனைக்குரிய ஞான நல்விருந்தாக அமைந்துள்ளது.

"பலர் தாம் செய்த பாவச் செயல்களுக்குப் பரிகாரமாகக் கோயிலுக்குச் செல்கின்றனர். தீர்த்த யாத்திரை போகின்றனர். அவை எல்லாம் எதற்காக? திரும்பவும் தீய பாவங்கள் செய்ய அனுமதி பெறவா? இறைவன் உறையும் திருக்கோயிலுக்குச் செல்லு



11-9-72ல் விநாயக சதுர்த்தியை ஆரம்பித்து வைத்து மகா மண்டபத்துக்கு தமிழக கவர்னர் திரு. கே. கே. ஷா அடிக்கல் நாட்டியபோது எடுத்த படம். அருகில் இருப்பவர்கள், நீதிபதி திரு. S. நடராஜனும் தருமை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீமகாலிங்கத் தம்பிரான் சுவாமிகளும்

வதன் நோக்கம் மீண்டும் பாவ காரியங்களைப் பண்ணுமலிருக் கவே. அத்தகைய நல்லுணர்வை மக்களிடையே இங்கு அமைந் துள்ள விநாயகர் ஆலயம் ஏற் படுத்தப் பெரிதும் உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.''

இவ்வாறு அன்று தமிழக ஆளு நர் ஆற்றிய அருளுரை இந்துக்கள் ஒவ்வொருவர் இதயத்திலும் ஞான தீபத்தை ஏற்றுவதாக அமைந்துள்ளது. 'பாவம் புரி யாப் பெருந் திறனைப் பரமா, எமக்குத் தந்தருள்வாய்' என்று இறைவனிடம் வேண்டும்படி யான எண்ணத்தை எழுப்புகிறது ஆளுநரின் அறவுரை.

காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமி களைக் கொண்டு பூரண மஹாகும் பாபிஷேகத்தை நடத்துவது என்று முடிவு செய்யப் பெற்றுள் ளது. காசி யாத்திரையை மேற் கொண்டுள்ள ஸ்ரீ சுவாமிகள் திரும்பி வருவதற்கு முன்பாக ஆலயத் திருப்பணி முழுவதும் முடித்து விட வேண்டு மென்று தீர்மானித்திருக்கின்றனர் திருப் பணிக் குழுவினர். இக் கோவிலுக் கான ஸ்ரீ சக்கரம் ஸ்ரீ சங்கராச் சார்ய ஸ்வாமிகளுடைய பூஜை யில் உள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

பாலாலய கும்பாபிஷேகம் நடைபெற்ற போதே பக்தகோடி கள் அதைக் கண்டு களித்து, "இக் கும்பாபிஷேகம் மஹா கும்பாபி ஷேகம் போல் தோன்றுகிறதே அன்றிப் பாலாலய கும்பாபிஷேக மாகப் படவில்லை" என்று உவகை ததும்பக் கூறிச் சென்றனர். பூரண மஹா கும்பாபிஷேகத் தைக் காணும் பேறு அவர்களுக் குக் கிடைக்கும் போது "இத்த கைய சாஸ்திரோக்தமான மஹா கும்பாபிஷேகத்தை எங்கள் வாழ் நாளில் இதுவரை கண்டதில்லை" என்று பேரானந்தம் பொங்கக் கூறுவர் என்பது திண்ணம்.

பாலாலய கும்பாபிஷேகம் நடந்தேறிய நாளிலிருந்து ஊரின் பல பக்கங்களிலிருந்தும் பக்தமணிகள் ஆலயத்திற்கு வந்து அர்ச்சனை, அபிஷேகம் முதலியன செய்து சிந்தாமணி விநாயகப் பெருமானின் பேரருளைப் பெற் றுச் செல்கின்றனர். பரதேவதை யின் வடிவங்களான பெண்மணி களின் பெருங் கூட்டத்தை வெள் ளிக் கிழமைகளில் காணலாம். அவ்வப்போது ஆலயத்தில் பக்தி மணம் பரப்பும் உபந்யாசங்கள் நிகழ்ந்து வருகின்றன. இன்னும் சில நாட்களில் இந்த சிந்தாமணி விநாயகரின் அருட் பெருமை இவ் வையகமெங்கும் பரவிச் சென்னை ஆழ்வார் திருநகர் மிகவும் பிரபல மான விநாயகர் ஸ்தலமாக விளங்கப் போகிறது என்பதை இன்றே உறுதியுடன் கூறலாம்.

தெய்வநெறி வளர வேண்டு மானல், திருமிக்க, தீரமிக்க இன் றைய இளைஞர்கள் தாம் எழுச்சி கொள்ள வேண்டும். அவர்களின் அரும் பணியால் தான் ஆஸ்திகம் தழைக்க வேண்டும்.

ஆழ்வார் திருநகரில் உள்ள படித்துப் பட்டம் பெற்று உத்தியோகம் புரியும் உத்தம பக்தியுள்ளம் படைத்த இளைஞர்களின் பேரெழுச்சி பெரிதும் குறிப்பிடத்தக்கது. அவ்விளைஞர் பெருமக்கள்தான் மிகுந்த ஆர்வமுடன் முனைந்து, முன்னின்று விநாயகர் ஆலய மஹாகும்பாபிஷேகத்தை வெகு விமரிசையாக நடத்தி முடித்து விட வேண்டும்மென்று கங்கணம் கட்டிக்கொண்டு, ஆலயத்திருப்பணியில் தங்களை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டுள்ளனர்.

அவர்களைப்போல் இன்றைய இளைஞர் சமுதாயம் எழுச்சி கொண்டு இயங்குமாயின், ஆழ்வார்களும், நாயன்மார்களும், பக்திநெறி பரப்பிய அன்றைய தெய்வப் பொற்காலத்தை இன்று காண இயலும் என்பதில் ஐயமே இல்லை.

ஆலயத்திருப்பணிக் குழுவினருக்கு அவ்வப்போது இந்துமத அறநெறிப் பெருங்காவலர்களான முன்னால் தமிழக முதல்வர் திரு. எம். பக்தவத்சலம், திரு. எம். எஸ் சாரங்கபாணி முதலியார், முதலியவர்கள் தேவயான ஆலோசனைகளைக் கூறி ஊக்குவித்து வருகிறார்கள்.

இவ்விநாயகர் ஆலயத்திற்கு வருகை புரிந்த அமெரிக்காவில் வேலை பார்க்கும் Dr. அழகப்பன், பிரபல தொழில் அதிபர் திரு. மருதைப்பிள்ளை, திரு. நாராயண ராவ், திரு. கமலசாமி, முதலிய அருட்செல்வர்கள் ஆலய அமைப்பைக் கண்டு போற்றி, இந்த விநாயகர் திருக்கோயிலைப் போலவே அமெரிக்கப் பெருநாட்டில் சிந்தாமணி விநாயகர் ஆலயம் கட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகின்றார்களென்றால் ஆழ்வார் திருநகர் சிந்தாமணி விநாயகர் ஆலயத்தின் பெருஞ் சிறப்பை மேலும் விவரிக்க வேண்டுமோ?

அங்கையற் கண் அம்மையின் அரிய பக்தரான திரு. பி டி. ராஜன், திரு. ஒ. வி. அழகேசன் ஆகியவர்களின் நல்ல ஒத்துழைப்புடன் ஆலயத் திருப்பணியும் நிதியும் வளர்ந்த வண்ண மிருக்கின்றன.

இந்த ஆலயத் திருப்பணிக்கு வேண்டிய ஏனைய உதவிகளை இதய மகிழ்வுடன் திரு. எஸ். நடராஜன் அவர்கள் செய்துவருவதை ஆழ்வார்திருநகரின் பெருமக்களும், திருப்பணிக் குழுவினரும் மிகவும் பெருமையுடனும் பூரிப்புடனும் கூறி வருகின்றனர்.

இந்த சிந்தாமணிவிநாயகர் தேவாலயத்தைக் கட்டுவதற்கு இடம் தந்து உதவியவர்கள் வளசரவாக்கம் பஞ்சாயத்தினர் ஆவார்கள். இடம் கிடைத்து, இனிய நிதி கிடைத்து, இறைபணியாற்றும் இதயம் கிடைத்து இளைஞர்களின் எழுச்சி கிடைத்து வளர்ந்து வரும் இவ்வாலயத் திருப்பணி இனிது முடிவுற இலட்

சம் ரூபாய்கள் தேவைப்படுவதால், ஆஸ்திக அன்பர்கள் எல்லோரும் இயன்ற பொருளுதவியை முன்வந்து செய்து, சிந்தாமணி விநாயகப் பெருமானின் பேரருளுக்குப் பாத்திரமாகி இம்மை மறுமை நலன்கள் நிறைவுடன் எய்தும் பேற்றைப் பெற வேண்டியது பிறவி பெற்ற பெரும் பயனாகும்.

அவனியெங்கும் அன்பு பெருகி அறம் பெருகி, அருள்நெறி பெருகி, மக்கள் அனைவரும் ஒன்றிணைந்து, ஆனந்தப் பெருவாழ்வு வாழவேண்டும் என்ற பெருநோக்குடன் அருந்தொண்டாற்றிவரும் அருள் என்னும் தெய்விக மாதப் பத்திரிகையின் பணியகம் சிந்தாமணி விநாயகரின் திருவருட் பேரொளி வீசும் ஆழ்வார் திருநகரிலேயே அமைந்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் வாசகர்களுக்குக் கூற ஆசைப்படுகிறேன்.

ஆனைமுக அண்ணலின் அருட்கண் பார்வை பெற்ற அருள் இதழும் இந்தப் புவியெங்கும் ஆஸ்திகப் புத்துணர்வை எழுப்பி, இறையின்ப நிறை வாழ்வை விளைவிக்கும் என்பதை இச்சமயத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிந்தாமணி விநாயகரின் சீரருள் இவ்வுலகெல்லாம் நிறைக



● சங்க காலத்திலேயே தமிழ் நாட்டில் கோயில்கள் இருந்தன என்பதைப் புறநானூறு, பெரும் பாணாற்றுப்படை போன்ற தொன்மையான இலக்கியங் களால் அறியமுடிகிறது.

● சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னரேயே தமிழகத்தில் சிவ பெருமான், முருகன், பலராமன், திருமால் ஆகிய தெய்வங்கட்கு தனித்தனியே கோயில்கள் இருந் தன என்பதை சிலப்பதிகாரத் தின் மூலம் அறியலாம்.

● கோயில் கல்லுமில்லை, மண்ணுமில்லை, சுண்ணமுமில்லை. அது எண்ணம், நல்லெண்ணம். சக்தி வாய்ந்த எண்ணம். தெய் விகச் சக்திவாய்ந்த எண்ணம். அந்த எண்ணம் இந்த நாளிலும் தியானத்தில் சிறந்த அன்பர் களுக்குப் பெருஞ்சக்தியை கட வுள் தன்மையை வழங்கி வரு கிறது.

● முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு தென்பாண்டித் திருநாட் டில் ஸ்ரீவைகுண்டத்தின் வடபா லுள்ள திருக்கைலாசத்தில் சைவ வேளாள குலத்தில் சண்முக சிகா மணிக் கவிராயரும், சிவகாமி சுந் தரி அம்மையாரும் தவமிருந்து பெற்ற செல்வமே குமரகுருபரர்.

● இந்திய மக்கள் அனைவருக் குமே சிறந்த புண்ணியஸ்தலம் காசி. அதனிடத்து மிக்க ஈடுபாடு கொண்ட தமிழ்மக்கள் எல்லோ ரும் காசிக்குச் சென்று வழிபட இயலாத நிலையை மனத்தில் கொண்டு, தங்கள் தங்கள் ஊரில் உள்ள ஆலயத்திலும் காசி விசுவ நாதரைப் பிரதிஷ்டை செய்து கொண்டார்கள்.

● தீண்டப்படாதவர்களே ஹரி யின் உண்மை மக்கள் என்ற பொருளில் அவர்களை ஹரிஜனங் கள் என்று மகாத்மா காந்திஜி அழைத்தார். அவர் நடத்திய பத்திரிகைக்கும் "ஹரிஜன்" என்றே பெயர் வைத்தார்.

● சிவபெருமானின் உயர்வைக் கூறும் புராணங்கள் பலவற்றுள் முக்கியமானவை மூன்று. அவை பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்தபுராணம் என்பன வாகும்.

● சிக்கல் சிங்காரவேலர் கோயி லுக்கு முன் அமைந்துள்ள கல்யாண மண்டபம் எங்குமே காணமுடியாத மிகப் பெரிய அலங்கார ஹாலாகும். நீளம் 300 அடி. அகலம் 60 அடி ஆகும். ஒரே சமயத்தில் 4000 மக்கள் இருக்கமுடியும். இது 1932-ல் கட்டப்பெற்றது.

● நம் நாட்டிலுள்ள கனிவகை களில் தலையாய கனி அரச கனி என்கிற எலுமிச்சம் பழம் ஆகும். இந்தக் கனி அரசன் முதல் ஆண்டி வரை உபயோகிக்கும் கனி ஆகும். இது தமிழ்நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் ஐயம் பேட்டையிலும், வடஆற்காடு மாவட்டத்தில் வேலூரிலும் அதிகம் பயிரிடப்படுகிறது.

● திருமறைக் காட்டில் வேதங் களால் பூட்டப்பெற்ற திருக்

கோயில் கதவைக் பதிகம்பாடித் திறந்து அருளினுர் அப்பர் சுவாமிகள்.

● பழக்கம் பலம் வாய்ந்தது. பழக்கத்தால் கோழி பாறையையும் கீறும் என்று சொல்வார்கள். குழந்தைகட்கு இளமைப் பருவத்திலேயே நல்ல பழக்க வழக்கங்கள் ஏற்படச் செய்ய வேண்டும். அதற்குச் சிறந்த வழி பெரியவர்கள் நல்ல பழக்க வழக்கங்களை உடையவர்களாக இருக்க வேண்டும்.

● ஸ்ரீ மஹா கணபதியை வணங்குவோர்க்கு துர்க்கா, லெட்சுமி, சரஸ்வதி இவர்கள் மூவருடைய அருள் ஏற்படும் என்ருர் ஒளவையார்.

● மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் பெருமைகளை முழுமையாகப் பெற்ற தலம் காசி. அங்கே கோவில் கொண்டுள்ள விசுவநாதருக்கு நாள்தோறும் திருவனந்தல், உச்சிக்காலம், அர்த்த ஜாமப் பூசைகளையும் செய்யும் பேறு நகரத்தார்களுக்குக் கிடைத்திருக்கிறது.

● பெரும்பாலும் அதைர்யமே திக்குவாய்க்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது. சிறுகுழந்தையாக இருக்கும் போது பெரியவர்கள் அதட்டி மிரட்டி வளர்ப்பதால் தன்னம்பிக்கை இழந்து பேசவே பயந்து திக்குவாய் ஏற்படுகிறது.

● அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் அடுத்தபடியாக அதிக நீளமுள்ள ரயில்பாதை இந்தியாவில் தான் உள்ளது. நம்நாட்டில் 6000 ரயில்வே ஸ்டேஷன்களுக்கு மேல் உள்ளன.

● இந்தியாவில் ஏற்பட்ட முதல் சர்வகலாசாலை சென்னையில் உள்ளதாகும். இது 1852ல் ஏற்பட்டது.

● எங்கும் நிறைந்த இறைவனை எங்கும் எளிதாகக் கிடைக்கக் கூடிய பூவினுலும், நீரினுலும் நாம் வழிபட வேண்டும். வழிபாட்டிற்கு அன்பும், ஆசாரமும் இரண்டு கண்கள் போன்றவை.

● திருக்கோயில்களிலுள்ள திருவுருவங்கள் தேவர்களாலும், முனிவர்களாலும், நால்வர், ஆழ்வார்கள் ஆகிய ஆன்ருேர்களாலும் நிறுவப்பெற்ற காரணத்தால் அவை மேன்மை பெற்று வழிபடுவோருடைய வல்வினைகளை அகற்றி வேண்டிய வரங்களை வழங்கி அருள் புரிகின்றன.

● ஆரோக்யம் பெறவேண்டின் சூரியனை வணங்க வேண்டும். செல்வம் பெற அக்னியை வணங்க வேண்டும். ஞானம்பெற முருகனை நினைந்து வணங்க வேண்டும். சுகம் பெற திருமாலைப் போற்ற வேண்டும். ஆற்றல் பெற அம்பிகையைத் தொழவேண்டும்.

● மன அழுக்கு தியானத்தாலும், வாயழுக்கு துதிப்

தாலும், மெய்யழுக்கு அர்ச்சனை யாலும் நீங்கும்.

● பிரார்த்தனை என்பது வேலை யில்லாத கிழவிகளின் பொழுது போக்கல்ல. அதை சரியாக உணர்ந்து கடைப் பிடித்தால் அதைவிடச் சக்திவாய்ந்த ஆயுதம் எதுவுமில்லை என்பதை உணர லாம் என்று மகாத்மா காந்திஜி சொன்னார்கள்.

● உணவில் அறுசுவை உண்டு. இலக்கியங்களில் எட்டு சுவைகள் உண்டு. அவையாவன நகை, இரங்கல், இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பதாம்.

● உறக்கம் சகல கவலைகளையும் மறக்கச் செய்வதுபோல் இறை வனுடைய திருவடித் தியானம் சகல கவலைகளையும் துறக்கச் செய் கிறது. பாராயணம், வழிபாடு, தெரிசனை, ஜெபம், தியானம், சமாதி இவைகளைப் படிமுறை யாகப் பெறுதல் வேண்டும்.

● உப்பு சாப்பிடுவதால் நரை யும், புளி சாப்பிடுவதால் உடலில் திரையும் வருகின்றனவென்று சித்தர்கள் சொல்லுகின்றனர். எனவே சாத்தியமான அளவுக்கு புளியைக் குறைத்து சாப்பிட வேண்டும்.

● கிழங்கு வகைகளில் சேனைக் கிழங்கு, கருணைக் கிழங்கு சிறந் தவை. காய்கறிகளை சமையலுக்கு முன் சுத்தமான தண்ணீரில் சுத்தப்படுத்த வேண்டும்.

● பயம், கோபம், கவலை போன்ற மனவுணர்வுகள் ஜீரணத் தைக் கெடுக்கின்றன. சுமுகமான மனநிலை நன்கு ஜீரணமாக உதவுகிறது.

● தலைக்கனம் இரண்டு வகைப் படும். தன்னைப் பெரிதாக நினைப் பது முதல் வகை. பிறரைத் தாழ் வாக நினைப்பது இரண்டாவது வகை.

● தன் மீது பிறர் வீசிய பழி என்னும் கற்களைக் கொண்டே தன் அஸ்திவாரத்தை வலுப்படுத் திக் கொள்ளும் மனிதனே வெற்றி பெருகிறான்.

● கடன்காரனாய்ப் படுக்கையை விட்டு எழுவதைக் காட்டிலும் பட்டினியோடு படுத்துக் கொள்வது மேல்.

● உணவுக்கு முன் இரண்டு ஆல்பகோடா பழங்களும், உண்ட பின் நான்கு நெல்லிக்கனிகளும் தினமும் ஒருமுறை சிறிது கடுக் காய் பொடியும் தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் உடல் ஒளி பெறும். இளமை நீடிக்கும்.

● மஞ்சள்தூள், கற்பூரம் வெந் நீரில் கலந்து அந்த நீரினால் புண் களை சுத்தம் செய்து மஞ்சள் பொடியை தூவி வைக்க ஆறாத புண்களும் ஆறும்.

● இரத்தத்தில் பாஸ்பரஸின் அளவு குறைந்து கால்சியம் அளவு அதிகமாக வேண்டும். அதற்கு தேன் நல்லது.

# கடன்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்த வாரியார்

"தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்" என்பது திரி கடுகம். ஒவ்வொரு மனிதனும் நல்ல முயற்சி செய்து கடன் படா மல் வாழ வேண்டும்.

சிலர் தொட்டதற்கெல்லாம் கடன்படுகிறார்கள். கடன் கேட்டு வாங்குதல் என்பதைச் சிலர் பால் பாயசமாகக் கருதியுள்ளார்கள். அது நஞ்சினும் கொடியதென அறிகின்றார்களில்லை.

ஒவ்வொரு மனிதனும் தனது வருவாய்க்குத் தக்கவாறுதான் செலவழிக்க வேண்டும், வருவாய் குறைகின்றபோது செலவினங் களைக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

மனிதனுக்குக் கடன் என்பது பெருந் தொல்லை கொடுப்பது; எல்லையில்லாத இடரை விளைவிப் பது; இவ்வில்லங்கத்தில் கூடுமான வரை மனிதன் சிக்கிக்கொள்ளக் கூடாது.

தனக்கு மாதம் மாதம் வரும் வருவாயை வகுத்துத்தான் செலவு செய்ய வேண்டும். வரு வாய்க்கு அதிகம் செலவழித்து அதனால் கடன்படுகின்றார்கள். அக் கடனுக்கு வட்டியும் ஏறும். வட்டி யையும் கடனையும் எந்த வழியில் தீர்க்க முடியும்? தனக்கு வரும் வருவாய், குடும்பச் செலவுக்கே போதுமானதாக இல்லாமலிருக் கும் நிலையில் கடனை யடைக்க முடியாதுதானே? நாள் செல்லச் செல்ல கடனுக்கு வட்டி ஏறிக் கொண்டே யிருக்கும். ஒருவரிடத் தில் 500 ரூபாய் கடன் வாங்கி னால், அக்கடனுக்கு 24 மணிநேர மும் வட்டியேறிக் கொண்டே யிருக்கும்.

கடல் அலை ஓய்வதில்லை. அது போல் வட்டியாகிய கடன் அலையும் ஓயாது. வட்டியென்ற ஒன்றுக்குத் தூக்கம் கிடையாது. ஓய்வு கிடையாது. இரவு பகல் என்ற மாறுபாடு கிடையாது. செல் மரத்தைத் தின்று விடுவது போல் வட்டி மனிதனைத் தின்று விடும். 500 ரூபாய் வாங்கிய ஒருவன் 10 வருஷத்திற்குப் பின் 1494 ரூபாய் வட்டியும் முதலுமாகத் ' தரவேண்டியதாகிவிடும். மூன்று மடங்காகப் பெருகிவிடுகின்றது.

அதனால் கடன் பட்டவன், கடனைத் திருப்பித் தர வழியின்றி முதாதைகள் அவனுடைய நலங் கருதித் தேடி வைத்த வீடு, நிலம், நகை முதலியவற்றை விற்க நேரிடும். அல்லது கடன் தந்தவனிடம் அவமானம் அடைய நேரிடும். உத்தமமான உள்ளம் படைத்தவர்கள் அதனால் பெரிதும் கலங்குவர். "கடன்பட்டார் நெஞ்சம் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்" என்ற சொற்றொடர் இது பற்றி எழுந்தது.

நன்மனம் படைக்காதவர்கள் கடன் தந்தவனைப் பகைப்பர்; ஏமாற்றுவதற்கு வழி தேடுவர்.

எனக்குத் தெரிந்தவர் ஒருவர்; அவரிடம் கடன் தந்தவர் சென்று பல ஆண்டுகட்குப் பின்னர் கடனைத் திருப்பித் தருமாறு நயமாகக் கேட்டார்.

கடன் பட்டவர் கூறுகின்றார்; "ஐயா! நீர் என்னை நம்பித் தானே தந்தீர். கடைசிவரை நம்பியிரும். இப்போது என்ன அவசரம்? உமக்குச் சாப்பாட்டுக்கு இல்லாமலா கேட்கின்றீர். என்னிடத்திலிருந்து வாங்கி இன்னொருவனுக்குத் தரப் போகின்றீர். அது என்னிடம் தானே இருக்கட்டுமே" என்றார். இன்னும் ஒருவர் கூறினார்: "ஏனையா நீர் எனக்குக் கடன் தந்தீர்? முந்திய பிறப்பில் என்னிடம் வாங்கியிருப்பீர்; அதை இப்போது தந்தீர்; சத்தம் போடாமல் சாந்தமாக இரும்" என்றார்.

இதனால் கடன் பட்டவனுக்குத் தரவேண்டும் என்ற நினைவேயில்லை என்பது புலனாகின்றது. இவ்வாறு கடனைத் தராமல் மாள்பவர் மறுபிறப்பில் மாடாகவோ மனிதனாகவோ பிறந்து உழைத்துத் தரவேண்டும். அப்படித் தருகின்றபோது எத்தனையோ மடங்கு வட்டி பெருகி அத்தனையுந் தரவேண்டி வரும். பழி பாவத்துக்கும் ஆளாகின்றனர்.

பலர் ஆசைக்கு அடிமையாகி; தம்மிடம் உள்ள சிறு தொகையுடன் பெருந் தொகை கடன் வாங்கி வீடு, நிலம் இவைகளை வாங்குவர். கடன் ஏறி தொல்லைப் பட்டு விற்றுக் கடனையடைத்து, தம்மிடம் இருந்த தொகையையும் இழந்துவிடுவர். அன்றியும் சிறிது கடன் நின்று கலக்கமுறுவர்.

கடன் என்பது ஒரு நோய்க்குச் சமானம். நோய் உடம்பையரிக்கும்; கடன் உள்ளத்தையும் உணர்வையும் அரிக்கும். அந்தோ! கடன்

தொல்லை வடவாக்கினி போன்றது. மனிதனை உயிரோடு எரிக்கும் வன்மையுடையது.

ஒரு சமயம் இலண்டனையாண்ட மகாராணி-இந்தியாவுக்குச் சக்ரவர்த்தினியாயிருந்த விக்டோரியா அம்மையார் ஒரு கடையில் சாமான் வாங்கினார்களாம். கையில் இருந்தபணத்தினும் சாமான்கள் அதிகமாக இருந்தன. கடைக்காரன் அரண்மனைக்குச் சென்று பணம் அனுப்பும் என்றானாம். மகாராணி பணத்துக்கு ஏற்ற அளவில் சாமான்கள் பெற்றுக் கொண்டார்களாம். கடனாக வாங்கக்கூடாது என்று கருதினார்களாம்.

ஆகவே கடைக்காரன் கடன் தருகின்றான் என்று கருதி விருப்பம்போல் தேவைப்பட்டதையும் தேவைப்படாததையும் அள்ளிக்கொண்டு வரக்கூடாது. சிலர் துணிக்கடையில் கடன்; நகைக் கடையில் கடன்; பல சரக்குக் கடையில் கடன்; இப்படி இறைவன் எங்குமிருப்பதுபோல் கடன் எங்கும் இருக்கும்படி வாங்கி மனே சாந்தியிழக்கின்றார்கள்.

கடன் பட்டுக் கலங்குகின்றவர்களைப் பார்ப்பதுமே ஒரு பரிதாபமான காட்சி. அதனால் இனியவை நாற்பது என்ற சங்க நூல் "கடன் பட்டு வாழாமை காண்டல் இனிதே" என்றுகூறுகின்றது.

ஆகவே அறிவுடையவர் கடன் படாமல் வாழ்வதற்கு முயல்வார்களாக. O

1956ம் வருஷத்திய ரிஜிஸ்தரேஷன் ஆப் நியூஸ் பேப்பர் (சென்ட்ரல்) விதிகளில் 8வது விதிப்படி "அருள்" என்ற தமிழ் மாதப் பத்திரிகையின் உடைமையாளர் பற்றிய கீழ்க்கண்ட விவரங்கள் பிரசுரிக்கப்படுகின்றன.

பாரம் 4

| | |
|---|---|
| 1. பிரசுரிக்கப்படும் இடம் : | சென்னை |
| 2. பிரசுரத்தின் தன்மை : | மாதம் ஒரு முறை |
| 3. அச்சிடுவோர் பெயர் : | கொண்டா. காசி. சீதாராமன்<br>இந்தியர்<br>ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ்<br>81-5, பாண்டி பஜார்<br>சென்னை-600017 |
| 4. ஆசிரியர் பெயர் : | T. ராமநாதன் |
| இனம் : | இந்தியர் |
| முகவரி : | 231, ஆழ்வார் திருநகர்<br>சென்னை-600087 |
| 5. பிரசுரகர்த்தர் பெயர் : | T. ராமநாதன் |
| இனம் : | இந்தியர் |
| 6. இப்பத்திரிகையின் சொந்தக்காரரர் பெயர், விலாசம், மொத்த முதலில் நூற்றுக்கு ஒன்றுக்கு மேல் முதல் போட்டுள்ள கூட்டாளிகள், பங்குதாரரர்கள் பெயர்கள், விலாசங்கள். | T. ராமநாதன்<br>231, ஆழ்வார் திருநகர்<br>சென்னை-600087<br>(பூரண உரிமையாளர்) |

ராமநாதன் என்ற நான் இதன் மூலம் தெரிவித்துக்கொள்வது என்னவென்றால், மேலே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் அனைத்தும் நானறிந்த மட்டில் உண்மை.

(ஒப்பம்)

1—3—73

T. ராமநாதன்

பிரசுரகர்த்தர்

# செய்திகள்

- சென்னையில் பிரபல பட்டு ஜவுளி விற்பனையாளர்களான நல்லி சின்னசாமி செட்டி உரிமையாளரான திரு. நல்லி குப்புசாமி அவர்களின் செல்வி பேபி கீதாவின் நாட்டிய அரங்கேற்றம் தி. நகர் வாணிமஹாலில் தமிழக ஆளுநர் திரு. கே. கே. ஷா அவர்கள் தலைமையில் சென்ற மாதம் மிகச் சிறப்பாக நடந்தது திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் பேபி கீதாவையும், பெற்றோர் திரு. குப்புசாமி அவர்களையும் பாராட்டி ஆசி வழங்கினார்கள்.

- சென்னையை அடுத்துள்ள திருவேற்காடு ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் ஆலயம் காலை 4 மணியிலிருந்து இரவு 10 மணி வரை திறந்திருக்கும். பகலில் நடை சாத்துவதில்லை. எனவே வெளியூரிலிருந்து வரும் பக்தர்கள் கோயில் சாத்தியிருக்குமோ என அவசரம் அவசரமாக வராமல் சௌகரியமாக வந்து தேவியின் அருளைப் பெறலாம்.

- 1973—1974ம் ஆண்டு ராபி பருவத்திலிருந்து கோதுமை தானியத்தின் மொத்த வியாபாரத்தை அரசாங்கம் எடுத்து நடத்த முடிவு செய்திருக்கிறது என்று அண்மையில் லோக சபையில் விவசாய மந்திரி பக்ருத்தீன் அலி அகமது அறிவித்தார்.

- சென்ற மாதம் 26ந்தேதி தமிழக சட்டசபையில் முதல் அமைச்சர் தாக்கல் செய்த பட்ஜெட்டில் புதுவரிகள் ஏதும் இல்லை. 49 லெட்சம் ரூபா உபரி பட்ஜெட்.

- சண்டீகரில் நிருபர்களிடம் பேசும் போது மத்திய கல்வி மந்திரி திரு. நூருல் ஹாஸன் தெரிவித்த செய்தியாவது. உயர்நிலைப் பள்ளிப் படிப்பின் போது மாணவர்களுக்குத் தொழில் பயிற்சியும் அளிக்கும் திட்டம் 5வது ஐந்தாண்டு காலத்தின் போது செயல்படுத்தப்படும் என்றார்.

- 1973—1974 ஆண்டு மத்திய பட்ஜெட்டை பிப்ரவரி 28ந் தேதி பார்லிமெண்டில் நிதி மந்திரி சவாண் சமர்ப்பித்தார். அதில் 292 கோடிக்கு புது வரிகள் போடப்பட்டிருக்கின்றன. ஏற்கனவே இருந்து வந்த அகதிகள் வரி ரத்தாகிறது.

- ஆழ்வார் திருநகர் சிந்தாமணி விநாயகர் பாலாலய கும்பாபிஷேகத்தில் கலந்து கொண்ட பிரதம மாகாண மாஜிஸ்ட்டிரேட் திரு. எஸ், நடராஜன் அவர்கள் அண்மையில் சென்னை ஹைகோர்ட்டின் புதிய நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ளார். சிறந்த பக்தரும் மனிதாபிமானம் கொண்டவருமான அவருக்குக் கிடைத்துள்ள இந்தப் புதிய பதவி சிந்தாமணி விநாயகரின் அருளேயாகும்.

- இந்திய வெளி விவகார இலாகா முன்னாள் காரியதரிசி டி. என். கவுல் அமெரிக்காவில் இந்திய தூதராக நியமிக்கப்பட்டுள்ளார்

- சேலம் உருக்காலை 1977ல் கட்டி முடிக்கப்படும். சமீபத்தில். வெளியான பட்ஜெட் விவரங்களில் இரும்பு எஃகு அமைச்சகத்திற்கான செலவினப் பிரிவில் இத்தகவல் அறிவிக்கப்பட்டுள்ளது. சேலம், ஹோஸ்பேட், விசாகபட்டினம் ஆகிய மூன்று உருக்காலைகளுக்கும் தலா 1 கோடி ருபா நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

- ரயில்களில் மூன்றாவது வகுப்பு இரண்டு அடுக்கு பெட்டிகளை மூன்று அடுக்குப் பெட்டிகளாக மாற்றும் ஒரு யோசனை அரசின் பரிசிலனையில் இருந்து வருவதாக ரயில்வே உதவி மந்திரி லோக சபையில் கூறினார்.

- இந்தியா முழுவதும் சுமார் 62 லெட்சம் பேர் கல்வி கற்று வேலை இல்லாமல் இருக்கிறார்கள். 1972 வருடம் செப்டம்பர் மாதம் வரையில் வேலை வாய்ப்பு பதிவு நிலையங்களில் பதிவு செய்து கொண்டவர்களின் கணக்கு இது. மேற்கு வங்கத்தில் தான் கல்வி கற்றவர்களிடையில் வேலை இல்லாமல் இருப்பவர்கள் அதிகம். சுமார் 12லெட்சம் பேர் கல்வி கற்று வேலை இல்லாமல் இருக்கிறார்கள். இந்த கணக்கு வேலை வாய்ப்பு நிலையங்களில் பதிவு செய்து கொண்டவர்களின் கணக்கு. பதிவு செய்யாதவர்கள் இன்னும் எத்தனை லட்சம் பேரோ?



# சன்மார்க்கம்

அருட்திரு விபுலானந்த அடிகளார்

உடலில் இரத்தவோட்டம் உள்ள வரையிலும் உள்ளத்தில்—சொல்லில்—செயலில் சன்மார்க்கம் ஓடிக்கொண்டிருக்கவேண்டும். இரத்தவோட்டம் உள்ள உடலை அறுத்தால் இரத்தம் ஒழுகுவது போல, ஒருவனுள்ளத்தையோ, சொல்லையோ, செயலையோ வெட்டி விட்டால், சன்மார்க்கம் ஒழுக வேண்டும். இரத்தவோட்டமில்லாத உடல்பிணமாய் அழுகிப் போய்ப் பலர்க்கும் தீங்கு தருவது போலச் சன்மார்க்க நெறி நில்லாதவனும் பிறர்க்குத் துன்பஞ் செய்கின்றான்.

நாம் நோய்க்கு இடங்கொடுப்போமாயின், பிறர்க்குத் தீங்கு இழைக்கும் பாவிகளாவோம். நாம் நெறி தவறும்போது மற்றோரையும் அவ்வாறு செய்வித்து, அந்தப் பாவத்தையும் நமது தலையிலே போட்டுக் கொள்கிறோம்.

பிறர் நலத்தின் பொருட்டன்றி நாம் அசுத்தக் காற்றைச் சுவாசிப்பதும் பொருந்தாவுணவு கொள்வதும் பாவமே. நாம் இப்பொழுது உண்ணும்உணவு, உடுக்கும்உடை, எண்ணும் எண்ணம் பத்து வருஷத்துக்குப்பின் நம்மிடம் பிறக்கப்போகும் குழந்தைகளைப் பாதிக்கலாம். சிறிதேனும் சுய நலக் கலப்பற்றிருந்தாலல்லாமல், இந்த உலகத்தில் குற்றத்திலிருந்து தப்ப முடியாது.

'நான் செய்யும் பிழை என்னை' மட்டுந்தானே பாதிக்கும்?' என்று எவனும் கேட்க முடியாது. சன்மார்க்க நெறியிலே மிகமிக நுட்பமாக ஒழுக வேண்டுவது ஒவ்வொருவனுக்கும் மிக வற்புறுத்தப்படும் விதியாகும்.

'பூரணமான சன்மார்க்க நிலையை எப்போதடைவோம்? எப்பொழுது சித்தம் சிவமாகிச் செய்தனவே தவமாகும்?' என்ற ஆசைஒவ்வொரு நாளும் உன்னைத் தின்று கொண்டேயிருக்கிறதா? தீமை போக்குமாறு ஒவ்வொரு நாளும் இறைவனை வேண்டுகிறாயா? மிகத் தூய்மையடைந்த பெரியோரது ஞாபகம் அடிக்கடி உன் மனத்தில் எழுந்துகொண்டிருக்கிறதா? இந்த நிலைமை ஆபத்தின்மையை ஒருவாறு காட்டலாம். தீவினைப்பயனை நுகரும் போது பிறர் துன்பஞ் செய்தாரென்று கருதி மேலுந் தீமையை ஈட்டிக் கொள்கிறோம். நல்வினைப்

பயனை நுகரும் போது வசதிகளைத் தியவழியிற் கையாண்டு தீமை தேடிக் கொள்கிறோம். ஆதலால், நுகர்ச்சியிற் காலம் போக்காது சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதே உய்யும் வழியாகும்.

வாழ்க்கை முழுவதும் பிழை மலிந்திருக்கிறது. இரண்டொரு பிழைகளை நீக்கி விட்டாலே மிகுந்த மகிழ்ச்சி — உயர்ந்த மதிப்புக் — கிடைக்கிறது; பொது ஜனங்களும் பெரியோர்களும் கொண்டாடுகிறார்கள்; இறைவன் கூட நேர் நின்று உதவி செய்ய வந்து விடுகிறான்.

பள்ளிக்கூடத்திலே உபாத்தியாயர் பத்துக் கணக்குக் கொடுக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். மாணவருட் பலர் ஒரு கணக்கேனும் செய்யாமல் இருக்கும் போது இரண்டொரு கணக்கு செய்த பிள்ளைகள் எல்லாவற்றையும் செய்தாற்போல மதிக்கப்படுவார்களல்லவா? அப்படியேதான் பிழை நிறைந்த உலகிலே நம்முடைய அற்பமான நற்செயல் எவ்வளவோ மகத்தான நற்பயனைத் தந்து விடுகிறது. சன்மார்க்கச் செயல்களுள் ஒவ்வொன்றும் சந்தோஷகரமானது; மங்களகரமானது. ஏன் நாம் சன்மார்க்கத்தைக் கடைப்பிடியாதிருக்க வேண்டும்?

O

---

பாரத அன்னை உலக வாழ்க்கைக்குப் புத்துருவம் தரவும் மானிடான்மாவில் அமைதியையும் மீண்டும் நிறுவவும் விதிக்கப்பட்டிருக்கிறாள்.

இந்திய வேறுபாடுகள் பல நிறைந்ததோர் ஒருமையாகும். இவ்வேறு பாடுகளில்தான் அதன் வலுவும் வலுவுக் குறையும் ஊன்றியுள்ளன. அதன் தேசிய வாழ்வின் திடமானது அதன் பிரதேச வாழ்வின் உறுதியையும் திடத்தையும் பொறுத்துள்ளது.

வேறெந்த சமுதாயமும் பெற்றிராத மனத்திண்மையைப் பாரதம் சிகரமாகப் பெற்றுள்ளது.

— மகான் அரவிந்தர்

பணக்காரன் இறைவனுக்கும் அவனது அடியார்கட்கும் தம் பணத்தால் பணிபுரிய வேண்டும். ஏழையோ, இறைவனது நாமத்தைத் திரும்பத் திரும்ப ஜெபிப்பதன் மூலம் இறைவனை வழிபட வேண்டும்.

— ஸ்ரீசாரதா தேவி

வானமும் பூமியும் அழிந்து போகலாம். ஆனால் என் வார்த்தைகள் அழியா.

— இயேசு கிறிஸ்து

# காட்டுப்பள்ளியில் கனகதானம்

ஸ்ரீமதி R. ஜானகி சுப்ரமணியம்

நம் சென்னைக்கு அருகாமையில் இருக்கும் சில சிறிய ஊர்கள் பலருக்குத் தெரியாமலேயே போய் விடுகிறது. இவைகளை எல்லாம் காஞ்சி ஆசார்யாள் மூலம் தான் தெரிந்து கொள்ள முடிகிறது.

இவைகளில் காட்டுப் பள்ளியும் ஒன்று. இது எண்ணூருக்கு அருகாமையில் உள்ள உப்பங்கழி மூலம் படகில் சென்று அடைய வேண்டிய ஒரு தீபகற்பம்போன்ற சிறிய ஊர். மூன்று பக்கம் நீரும் ஒரு பக்கம் தரை மார்க்கமும் கொண்டது. படகில் மூன்று மணி நேரமும், ஸ்டீம் மோட்டாரில் 1 மணி நேரமும் ஆகும். இந்த இடத்தில் ஆறு வருடங்களுக்கு முன் காஞ்சி பெரியவர்கள் முகாம் இட்டிருந்தார்கள்.

ஒரு நாள் அந்த நாளைய முதலமைச்சர் ஸ்ரீ பெரியவர்களைத் தரிசிக்க வந்தார்கள். ஸ்ரீ பெரியவர்களிடம் ஆழ்ந்த பக்தி கொண்ட அந்த முதல்வருக்கு ஸ்ரீ பெரியவர்கள் ராஜரீகமான மரியாதைகளைத் தன் சிப்பந்திகள் மூலம் செய்யச் சொன்னார்கள். அதன்படி ஒரு பெரிய ரத்ன ஜமுக்காளம் விரிக்கப் பெற்று அதில் அவரையும், அவரைச் சார்ந்தவர்களையும் உட்கார்த்தி வைக்கப் பட்டது.

சில வருஷங்களுக்கு முன் பெரியவர்களிடம் தீவிர பக்தி உள்ள அம்மையார் ஒரு கனவு கண்டார். ஒரு தங்க செம்பு. அது நிறைய முந்திரிப் பருப்பும், திராக்ஷை, கல்கண்டு நிரப்பி ஸ்ரீ பெரியவர்களுக்குச் சமர்ப்பிப்பதுபோல் கண்டார். ஏனோ அந்த அம்மைக்கு இதை நனவாக்கத் தோன்றியது. சிறிய நகை என்றாலே வாங்க முடியாமல் தவிக்கும் இந்த நாளில் தங்க செம்பு செய்து, தான் கண்ட கனவுப்படி அதில் திராக்ஷை, கல்கண்டு, முந்திரிப்பருப்பை நிரப்பி பெரியவர்களிடம் கொடுத்துவிட வேண்டும். உண்மையான பக்திக்கு ஈசன் அருள்புரிவார் என்பதை இதில் நன்றாகக் காணலாம். கூடிய சீக்கிரம் இது நிகழும் என்று அந்த அம்மையார் கூட நினைத்திருக்க மாட்டார்கள். தன் தாய் வழியில் அந்தக் குடும்பத்தின் சொத்தாக சில நகைகள் அந்த அம்மைக்குக் கிட்டியது. நகை என்றாலே பைத்தியமாக இருக்கும் பெண் இனம் பக்தி என்று வந்

தான் எப்படி இருப்பார்கள் என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டாகும்.

தன் பங்கு நகைகள் வந்தவுடன் புருஷனின் சம்மதத்தின் பேரில் பொற் கொல்லரிடம் கொடுத்து செம்பு, செய்யச் சொல்லிவிட்டு ஸ்ரீ ஆச்சார்யாளை தரிசிக்கச் சென்ருர்கள். பேச்சு வாக்கில் தான் கண்ட கனவைச் சொல்லி எப்படி நிறைவேறும் என்று இருந்த எண்ணம் இவ்வளவு எளிதாகக் கைகூடியதாகக் கூறி உவகை அடைந்தார்கள்.

பெரியவர்கள் அந்த அம்மைக்குச் சந்ததி இல்லை என்கிற காரணத்தால் தனக்குச் செய்ய விருக்கும் அன்பளிப்பை ஏற்றுக் கொள்ளச் சம்மதித்தார்கள். ஆனுல் எதிலுமே ஓர் ஒழுங்கு, ஒரு சட்டம் கடைப்பிடிக்கும் உத்தமரானபடியால் அந்த நாளைய அரசாங்கம் விதித்தவாறு 22 காரட் தங்கத்தை ஏற்காது 14 காரட்டில்தான் செய்யப்பட வேண்டும் என்று உத்தரவிட்டார்கள்.

அந்த மாதும் ஆசார்யாள் உத்தரவுப்படியே தங்க செம்பு 14 காரட்டில் செய்து எடுத்து வந்து தம்பதிகளாகத் தாம் கண்ட கனவுப்படி செய்து மனப் பூர்த்தியான சந்தோஷத்தை அடைந்தார்கள். இப்படிக் கொஞ்ச நாள் கழிந்தது.

சைனு யுத்த நிதிக்காக முதல் அமைச்சர் தன் மாநிலத்தில் சுற்றுப்பயணம் செய்தார்கள். ஆனுல் அதில் பெரியவர்கள் கூட பங்கு பெறுவர்கள் என்று நினைத்திருக்க மாட்டார். வழக்கம் போல குடும்ப யோக க்ஷேமம், தேகநிலை, அரசாங்க விஷயம் இவைகளைப் பேசிவிட்டு, சைனு யுத்தத்தினுல் நம் நாடு பாதிக்கப்பட்ட விஷயம் இவைகளை விசாரித்துவிட்டு, தனக்குக் கிடைத்த தங்கச் செம்பு நிறைய தேனை நிரப்பி, அந்தச் செம்பை பெரியவாள் முதல் அமைச்சரிடம் தந்தார்கள்.

அவ்வளவு பெரிய தொகை மதிப்புள்ள தங்கம் ஒரே இடத்திலிருந்து வரும் என்று அந்த முதல்வர் கொஞ்சம் கூட நினைத்திருக்க மாட்டார்.

தங்கம் என்பது லெக்ஷ்மி ஸ்வரூபம். அதை அளித்தவரோ ஸ்ரீ பரதேவதையே அவதாரமாக வந்தாள் என்று நினைக்கும்படி உள்ள ஆசார்யாள். அதில் நிரப்பப் பட்ட வஸ்துவோ மிக சிலாக்கிய மான மது. அதாவது தேன்.

அரசர்கள், மடாதிபதிகள், சம்பந்திகளைப் பார்க்கும் போது பாத்திரம் நிறைய தேனை நிரப்பி கையில் கொடுக்கச் சொல்லி இருக்கிறது. இதுபற்றியே கல்யாணத்தில் சம்பந்தி வீட்டார் வந்ததும் மது வர்க்கம் கொடுப்பது என்பது வழக்கம். தற்காலம் மதுவுக்குப் பதிலாக திரட்டிப் பாலாகக் கொடுக்கின்றனர். மது தான் சிரேஷ்டமானது, திரட்டிப்பால் தேனைப் போன்ற ருசியை உடையதே தவிர அதன் குணத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூடப் பெருது. ஆயுள் விருத்திக்கும், தேகவலிமை, வனப்புக்கும், ரத்த சுத்திக்கும், மலச்சிக்கல் நீங்கவும், கிறுகிறுப்பு மயக்கம் நீங்கவும் தேன் இன்றியமையாதது. கண்ணில் சிறிதளவு விட்டுக் கொண்டால் கண்ணுக்கு அவ்வளவு நல்லது. சிறிது நேரம் கரிக்கும். ஆனுல் பிற்பாடு அவ்வளவு நல்லது. இவ்வளவு அரிய தேனை தங்கப் பாத்திரத்தில் விட்டு தன் ஒப்புயர்வு இல்லாத ஜபம், பூஜை முதலியன செய்யும் திருக்கையினுல் அந்தக் காமகோடி பெரியவர்கள் வழங்கினுர்கள். இதைப்

பெற்றுக் கொண்ட முதல்வர் எவ்வளவு உவகையை அடைந்திருப்பார் என்று கூறவும் வேண்டுமா?

தங்கம் பெற்ற அதே சமயம் யுத்த பயமும் நீங்கி 14 காரட் கெடுபிடியிலிருந்து சுதந்திரமாக 22 காரட் நல்ல தங்கத்தை அணியும் பாக்கியம் மாந்தர் எல்லாருக்கும் கிடைத்தது.

இதிலிருந்து பெரியவர்களிடம் பழகும், நகை என்ருல் உயிரையே விடும் பெண் இனம் எப்படி தங்கத்தை தாராளமாக அளிக்கிறது என்பதும், அதைச் சட்டப்படி 14 காரட்டாக மாற்றச் சொன்ன பெரியவர்களின் கண்டிப்பும், யுத்தம் நாட்டுக்கு வராதபடி, சினேகிதமாக்கக் கொடுக்கப்பட வேண்டிய மதுவை நிரப்பிக் கொடுத்ததும், தங்கத்தை நாட்டின் பொருளாதார பற்றுக் குறைக்கு எடுத்துக் கொள்ள பூரண மனத்துடன் கொடுத்த விதமும் ஒன்றுக்கொன்று எவ்வளவு அடர்த்தியான உண்மைகளை அடக்கிக் கொண்டிருக்கிறது.

தனக்கு என்று வைத்துக் கொள்ளாது குருவுக்கு அர்ப்பணித்த அந்த அம்மாவும் அதையும் தனக்கு என்று வைத்துக் கொள்ளாது, நாட்டின் யுத்த காப்புக்கு அளித்த பெரியவர்களும் நமக்குப் புகட்டும் பாடம் தனக்கு என்று வேண்டாமல் பிறர்க்குமுழுமனத்துடன் கொடுப்பதுதான் தானம் என்பதாம்.

o

# சத்தியமும் அஹிம்ஸையும் வேறல்ல



மகாத்மா காந்திஜி

என்னுடைய அஹிம்ஸைக் கோட்பாடு, மிகுந்த வீரியம் வாய்ந்த சக்தியாகும். கோழைத் தனத்துக்கோ, பலவீனத்துக்கோ கூட அதில் இடமில்லை. பலாத் காரவாதியாவது என்ருவது அஹிம்ஸாவாதியாக மாறுவான் என்ற நம்பிக்கை உண்டு. ஆனல் கோழை விஷயத்தில் எத்தகைய நம்பிக்கைக்கும் இடம் கிடையாது.

ஒருவர் சத்தியத்தை நாடும் போது தம்முடைய எதிரிமீது பலாத்காரத்தைப் பிரயோகிக்கக் கூடாது. மாருக, பொறுமையுட னும் அனுதாபத்துடனும் அவ னைத் திருத்த வேண்டும்.

அஹிம்ஸையுடன் இணைந்த சத்தியாகிரகத்தின் மூலம் உல கையே உங்களுக்கு அடிபணியச் செய்யலாம். அரசியல் வாழ்வில் அதாவது தேசிய விழாவில் சத்தி யத்தையும், மென்மையையும் புகுத்துவது என்பதுதான் சத்தி யாக்கிரகத்தின் சாராம்சம்.

தீமை வேறு, தீமை செய்பவன் வேறு என்ற பாகுபாட்டை சத் யாக்கிரகி ஒரு போதும் மறக்கக் கூடாது. தீமை செய்பவன் மீது அவனுக்கு வெறுப்போ, மனக் கசப்போ இருக்கக் கூடாது.

உலகிலேயே மிகுந்த வல்லமை வாய்ந்த சக்தி அன்புதான். ஆயி னும் அதைவிடப் பணிவுள்ளது எதையும் கற்பனை கூடச் செய்ய முடியாது.

வேறு எவர் மீதும் ஆணை செலுத்துவதற்கு அன்பைத் தவிர வேறு ஆயுதம் எதுவும் என்னிடம் இல்லை.

அஹிம்ஸா ரீதியில் சமூகத்தை அமைக்க முடியாது என்று சொல் வது இக்காலத்தில் ஒரு மோஸ்த ராகிவிட்டது. இக்கருத்தை நான் ஆட்சேபிக்கிறேன்.

ஒருவரிடமும் கர்வமும், தந் நலமும் இருந்தால், அவரிடம் அஹிம்ஸை இருக்காது. பணிவு இல்லாமல் அஹிம்ஸையைக் கடைப்பிடிக்க முடியாது.

சத்யாக்கிரகி அச்சத்துக்கு இடமே கொடுப்பதில்லை. ஆகவே எதிரியை நம்புவதற்கு அவன் எச்சமயத்திலும் அஞ்சுவதில்லை. எதிரி இருபது தடவை நம்பிக்கைத் துரோகம் செய்தாலும், இருபத்தோராவது முறையும் அவனை நம்புவதற்குச் சத்யாக்கிரகி தயாராக இருக்கிறான். ஏனெனில் மனித சுபாவத்தில் உறுதியான நம்பிக்கை கொள்வதுதான் அவனுடைய கோட்பாட்டின் சாராம்சம்.

O

---



திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தநாதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# நாய்க்கு ஒரு கோயில்!

ஜகஸர் என்ற ஊரில் நாய்க்கு ஒரு கோயில் இருக்கிறது. அதற்குப் பூஜையும் விழாவும் நடைபெறுகின்றன! அது தோன்றிய வரலாறு விசித்திரமானது.

'ஆறுமாதக் கடன்காரர்கள்' என்று சிலர் உண்டு. இவர்கள் வியாபாரிகள். கிராம மக்களுக்குப் பண்டங்களைக் கடனில் விற்றுவிட்டு, தொகையை ஆறு மாதங்கள் கழித்து அறுவடையின்போது பெற்றுச் செல்வது இவர்களுடைய பழக்கம்.

இத்தகைய வியாபாரி ஒருவரை வட்டிக்காரர் தவணைக்கு முன்பே பணம் கேட்டார்.

மானத்துக்கு அஞ்சிய வியாபாரி, தம் கழுத்தில் அணிந்திருந்த தங்கச் சங்கிலியையும், விலையுயர்ந்த தம் நாயையும் வட்டிக்காரரிடம் ஒப்படைத்து, "என்னிடம் தற்போது உள்ளவை இவையே இவற்றை எங்காவது வைத்துப் பணம் புரட்டிக் கொள்ளுங்கள். தவணை முடிவில் பணம் கொடுத்து மீட்டுக் கொள்கிறேன்" என்றார். வட்டிக்காரர் பெற்றுச் சென்றார்.

அன்று நள்ளிரவில் வட்டிக்காரர் வீட்டில் திருடர்கள் புகுந்தனர். பொன்னும் மணியும் பொருளுமாகக் குவிந்திருந்த களஞ்சியத்தைக் காலி செய்ய முற்பட்டனர். அப்போது நாய் 'வள், வள்' என்று குரைத்து வீட்டிலுள்ளோரையும் அக்கம் பக்கத்தினரையும் எழுப்பிவிட்டது. திருடர்கள் கையுங்களவுமாக பிடிபட்டனர்.

நாயினால்தான் தன் களஞ்சியம் களவு போகாமல் தப்பியது என்பதை உணர்ந்த வட்டிக்காரர், அதன் சொந்தக்காரரான வியாபாரியின் கடன்களை ரத்து செய்ய விரும்பினார். ஆகவே நாயின் கழுத்தில் தங்கச் சங்கிலியைப் போட்டு, அதில், "உம்முடைய கடன்களை ரத்து செய்து விட்டேன். சங்கிலியும் நாயும் ஜாக்கிரதை!" என்று ஒரு சீட்டெழுதிப் பொருத்தி, நாயை அவிழ்த்து விட்டார்.

நாய் பொழுது புலருவதற்கு முன்பே தன் எசமானனை அடைந்து, அவர் காலைச் சுற்றி வந்தது. அதைக் கண்டதும் அவருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "ஏமாற்றி விட்டா வந்து விட்டாய்? 'கொடுத்த பொருளைத் திரும்பவும் அபகரித்த பாவி' என்ற அவப் பெயரை எனக்கு ஏற்படுத்தவா வந்தாய்?" என்று வெறிபிடித்தவர் போன்று கூறிக் கைத்தடியால் நாயைப் பன்முறை அடித்து நொறுக்கினார் வியாபாரி. பாவம். அதன் ஆவி பிரிந்தது.

'பொல பொல' வென்று பொழுது புலர்ந்தது. நாயின் கழுத்தில் கட்டியிருந்த தங்கச் சங்கிலியும் சீட்டும் கண்ணில் பட்டன. சீட்டைப் படித்த வியாபாரி குமுறிக் குமுறி அழுதார்.

நாய் புதைக்கப்பட்ட இடத்தில் ஒரு கோயில் எழுப்பி மனச் சாந்தி பெற்றார். ●

# சித்த வைத்தியமும் உலக க்ஷேமமும்



சேலம் டாக்டர் ஸ்ரீ. S. R. சிவராஜ் அவர்கள்

ஆதியிலே வியாதியுமில்லே, சாவுமில்லே,
அரன் அழிக்க, சிவனழிக்க வெல்வாரில்லே
நீதியிலே வரம்பு தப்பி நடந்ததாலே நிமலருடைய
சிருஷ்டிப்பு நோய்களாச்சு — அகஸ்தியர்

நமது முப்பாட்டனர் காலத்தைப் பார்ப்போமானுல், மக்கள் எல்லாரிடமும் நல்லொழுக்கம், குருபக்தி, தெய்வபக்தி, பெற்ரேர்களிடம் மதிப்பு, மரியாதை, பயம் இவைகள் இருந்து வந்திருக்கிறது. அந்த மாதிரி இருந்தால் நம் நாட்டில் மக்கள் இந்தக் காலம் மாதிரி இல்லாமல், நோய் நொடி இன்றி, திடகாத்திரமுள்ளவர்களாகவும் நீடித்த ஆயுள் உள்ளவர்களாகவும், தர்ம சிந்தை படைத்தவர்களாகவும் நேர்மை, உண்மை உள்ளவர்களாவும் திகழ்ந்து வந்தார்கள்.

ஒரு சில இடங்களில் பால்ய விவாகம் இருந்தாலும் பெரும் பாலும் மணவாழ்க்கையில் ஈடுபடும் வயது 30க்குமேலும் செய்து வந்தார்கள். அந்த மாதிரி திருமணம் ஆனவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளும், நல்ல திடமுள்ள, ஆரோக்யமான குழந்தைகளாகவே இருந்தன.

இன்றைய நாகரிக உலகில் உள்ளது போல், டாக்டர்கள், நவின ஆஸ்பத்திரிகள் ஏதும் அந்த நாளில் இல்லே. நோய்கள் அதிகம் இருந்தால்தானே டாக்

டர்களும், ஆஸ்பத்திரிகளும் அதிகம் தேவைப்படும்?

அந்தநாட்களில் ஊருக்கு ஊர் மருத்துவம் செய்யும் பண்டிதர்களும், பிரசவம் பார்ப்பதற்கு ஆயாக்களும் இருந்தார்கள். இவர்கள் தான் எந்த வியாதியையும் குணப்படுத்தி, தேவைப்படும்போது அறுவை சிகிச்சையும் செய்து வந்தார்கள். இருந்தாலும் மிகக் குறைந்த எண்ணிக்கையில் உள்ளவர்களுக்கே வைத்தியம் செய்ய வேண்டியதிருந்ததே தவிர, பொதுவாக மற்றவர்கள் ஆரோக்கியமாகவே இருந்தார்கள்.

காலப்போக்கில் மக்கள் சில நாத்திகர்களின் தூண்டுதலாலும் சோம்பேறித்தனத்தினாலும் அறவழி, கடவுள் பக்தியை மறந்தார்கள். நியாயம், நேர்மை குறைந்தது. பயம் குறைந்தது. தவறான வழிகளில் தைரியமாக ஈடுபடத் தொடங்கினார்கள். ஒழுக்கம் குறைந்தது.

இதனால் பலவிதமான நோய்கள் சுலபமாகப் பரவத் தொடங்கியது. நோய்கள் அதிகமாகவே கூடவே டாக்டர்கள், ஆஸ்பத்திரிகள் தோன்றலாயின. விளைவு? மக்கள் மேலும் கஷ்டப்பட வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. செலவுகள் கூட ஆரம்பித்தது. அந்த அளவு வரும்படி இல்லை. அதனால் மக்கள் கவலைப்பட வேண்டியதாயிற்று.

அகால மரணம், மாரடைப்பு, புற்று நோய்கள், வயிற்றுக் கோளாறுகள், மற்ற வியாதிகள் உருவாகி வர வேண்டிய நிலை ஏற்பட்டது. காரணம் நேர்மை தவறி நடந்து வந்ததால் வியாதிகள் அதிகமாயின.

அதே போன்று மற்றவழிகளிலும் வழி தவறி நடந்து வரத் தொடங்கியதால் நியாயஸ்தலங்கள், காவல்துறைகள் இவைகள் ஏற்பட்டன. நியாயம் தவறி நடந்தால் தவறுக்குத் தக்க தண்டனை ஏற்படவும் நிலைகள் உருவாக்கப்பட்டன.

மனிதர்கள் நோய் நொடி இல்லாமல், நீண்ட ஆயுளோடு திடகாத்திரர்களாக வாழ்ந்து வர சித்தர்கள் ஏராளமான வழிகள் சொல்லி இருக்கிறார்கள். அதை நமக்குச் சரியான முறையில் சொல்லுவதற்கு தெரிந்து கொள்ளுவதற்கு பல காரணங்களால் தடைகள் ஏற்பட்டதால் நாம் முன்னுக்கு வருவதில் கஷ்டங்கள் ஏற்பட்டன.

மிக சொற்ப செலவில் வியாதிகளைக் குணப்படுத்த சித்த மருத்துவத்தில் ஏராளமான வழிகள் இருக்கின்றன. இவைகளைப்பற்றி விவரமாக நான் 'அருள்' பத்திரிகை வாசகர்களுக்குத் தொடர்ந்து எழுதி வருகிறேன். பயனடைய வேண்டுகிறேன்.

○

# "யோகாசனங்கள்"
# ஏன் செய்யவேண்டும்

செயலாளர் : யோகாசன ஆலயம், சென்னை-33.

நமது முன்னோர்கள் சேமித்து விட்டுச் சென்ற செல்வத்தை சிலர் நாவிற்கு அடிமையாகி சுவையான பண்டங்களையே சாப்பிட்டு ஒதிய மரம் பருப்பது போல் பருத்து, பார்க்க விகாரமாக, காட்சியளித்து வாழ்கிறார்கள். ஊளச்சதை கொண்ட அந்த வாழ்க்கை, சுக வாழ்க்கை ஆகுமா? அந்த ஊளச் சதையினால் அவர்களுக்கு ஆபத்தே தவிர சுகம் கிடையாது.

சிலர் தங்களது தேகத்தை புறக்கணித்து அலக்ஷியம் காட்டி, இரவும் பகலுமாக புத்தகமும் கையுமாய், இருந்து படித்து அநேக பட்டங்கள் பெறுகிறார்கள். நல்ல உத்தியோகமும் கிடைக்கிறது. கிடைத்த உத்தியோகத்தின் மூலம் பெறும் ஊதியத்தை ஆரம்பத்தில் புறக்கணிக்கப்பட்ட சரீரத்திற்காக, டாக்டருக்கும், மருந்துக்கும் செலவிட்டுக்கொண்டு வரும் வாழ்க்கை சுகவாழ்க்கை ஆகுமா?

மேலும் வியாபாரம் செய்கிறவர்கள் சிலர் ஓய்வின்றி சரீரத்தைப் புறக்கணித்து, செல்வத்தை மேலும் மேலும் மலைபோல சேர்க்க வேண்டுமென்று ஒரே நோக்கத்தோடு வியாபாரத்திலேயே மூழ்கி விடுகிறார்கள். அவர்கள் தங்களுக்கு அருமையான ஒரு மானிட சரீரம் இருக்கிறது என்றும், அது நல்ல நிலையில் இருந்தால் தான் தாம் வியாபாரத்தில் ஈடுபட்டு செல்வம் மேலும் திரட்ட முடியும்; திரட்டிய செல்வத்தை நல்ல வழியில் செலவு செய்து, தானும் பயனடைந்து பிறரையும் பயனடையச் செய்யலாம் என்ற எண்ணமே வருவதில்லை.

தன் வியாபாரத்தின் மூலம் கிடைத்த செல்வத்தைக் கொண்டு உலகத்தில், தான் ஜீவிப்பதற்காக வேண்டியளவாவது சாப்பிட வயிறு இல்லாமல் துன்பப்படுகிறார்கள். அறுசுவை உணவிற்குப் பதிலாக அழகழகான மாத்திரைகளையே நம்பி வாழ்க்கை நடத்துகிறார்கள். அந்த வாழ்க்கை எந்த விதத்தில் சுக வாழ்க்கை ஆகும்.

அதனால், சிறிது சிந்தித்துச் பார்ப்போமானால் சரீரத்தை புறக்கணித்து எத்தொழிலைச் செய்தாலும், அதன் மூலம் கிட்டும் முழு பலனை அனுபவிக்க முடியாது. இன்னல் வாழ்க்கையே வாழ வேண்டிவரும் என நன்கு புலப்படுகிறது. சுவர் இருந்தால் தான் சித்திரம் எழுத முடியும் என்ற பழைய வார்த்தைக் கிணங்க உடலை நல்ல நிலையில் வைத்துக்கொண்டு நல் வாழ்க்கை வாழ்ந்தால் மனநிறைவுடன் சுகமாக வாழ முடியும். சுக வாழ்க்

கைக்கு யோகாசனங்கள் பயிற்சியும், உணவு வகைகளும் இரண்டு கண்களாக நமக்கு உதவுகிறது.

யோகாசனங்கள் செய்ய பழகுவதற்கு முன், சிறிது, நாம் உட்கொள்ளும் உணவைப் பற்றி சிந்திக்கலாம். உணவு விஷயத்தை எடுத்துக் கொண்டால் 90 சதவிதம் மக்கள் சாப்பிடும் உணவு சத்துள்ள உணவே இல்லை. மேலும் உடல் உள்ளுறுப்புக்களை பாதிக்கக் கூடிய உணவையே மக்கள் விரும்புகிறார்கள். உதாரணத்துக்கு முக்கியமான மூன்றை எடுத்துக் கொள்ளலாம்.

அரிசி: அரிசி தமிழ் நாட்டின் உணவுப்பொருள். அரிசியை எப்படி சமைத்து சாப்பிட்டால், பலன் தரும் என்று நமது முன்னோர்கள் காட்டிய பாதையை இப்பொழுது பின்பற்றுவதில்லை. நமது முன்னோர்கள் கைக்குத்தல் அரிசி சாப்பிட்டு வந்தார்கள். நவநாகரிகத்தின் காரணமாக அரிசி பாலிஷ் செய்யப்படுகிறது. அதனால் வன்மை தரக் கூடிய மேல், உள் தவிடுகள் நீக்கப்படுகிறது. தும்ப மலர் போன்று காட்சி அளிக்கும் பாலிஷ் செய்யப்பட்ட அரிசி துன்பம் தான் விளைவிக்கும்.

மிளகாய்: இதனை அதிகமாக உபயோகிப்பவர்கள் ஆந்திர நாட்டு மக்கள். ஈரத்துணி போட்டு கழுத்தை அறுப்பவன் என்று சொல்லும் சொல்லுக்கு உதாரணம் மிளகாய் என்று சொன்னால் மிகையாகாது. மிளகாய் அதிகம் சேர்ந்த உணவுப் பண்டங்கள் அதிகமாக காரம் இருந்த போதிலும் புலர் ருசித்து சாப்பிடுவார்கள். அவ்வளவும் உடல் உள்ளுறுப்புக்கள் பாதிக்கப்படுகிறது என்று உணர்வதே இல்லை. உள்ளுறுப்புக்கள் பாதிக்கப்பட்டால் பயங்கர நோய்களுக்கு ஆளாக வேண்டும். மிளகாயை அரைத்து, சந்தனம் பூசிக் கொள்வதுபோல் உடம்பில் பூசிப் பாருங்கள். எப்படி இருக்குமென்பது சொல்லாமலே அனுபவம் கிட்டும். அப்பேர்பட்ட சிறந்த குணம் படைத்த மிளகாய் மிருதுவான உள்ளுறுப்புக்களை என்ன பாடுபடுத்தும் என்று யோசிக்க வேண்டும்.

புளி: வேப்ப மரத்தின் காற்று ஆரோக்கியம் கிட்டும்; புளிய மரத்தி காற்று இரத்தத்தை கட்டும் என்று பெரியவர்கள் சொல்லுவார்கள். ஒரு இரவு புளிய மரத்தின் அடியில் படுத்து தூங்கி காலை எழுந்தவுடன், நிலமையைப் பார்ததால் 10 மைல் நடந்த களைப்பு தோன்றுவது போல சோர்வு தட்டும். புளிய மரத்து காற்று உடலில் உள்ள இரதத்தைச் சுண்ட வைத்து விடும். புளி அதிகம் கலந்த உணவை உட்கொண்டால், நோய்க்கிருமிகள் தன் வேலைகளை சுறு சுறுப்பாக வேலை செய்யத் தொடங்கி விடும்.

நாம் சாப்பிடும் உணவில் இப்பேர்பட்ட உபத்திரம் கொடுக்கக் கூடிய நண்பர்களை குறைந்த அளவில் சேர்த்துக் கொள்ளப் பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும்.



# "தாம்பூலம் தரித்தல்"

ஸ்ரீ அ. முத்தையன், கண்டாச்சிபுரம்

தாம்பூலம் தரித்தலாவது, வெற்றிலை, பாக்கு, சுண்ணும்பு இவைகளை அளவோடு கூட்டி மெல்லுவது. இதை நம் நாட்டு மக்களிற் பெரும்பாலோர் உபயோகித்து வருகின்றனர். ஏன்? கடவுளுக்கும் படைக்கின்றனர். தாம்பூலத்துடன் ஏலக்காய், கிராம்பு, வால்மிளகு, ஜாதிக்காய், ஜாதிபத்திரி ஆகியவைகளைச் சேர்த்து மெல்லுவதுண்டு. இதனுல் முகவசிகர முண்டாகிறது; உஷ்ண மூலத்தினுல் எற்படும் வாய் நாற்றமும் மறைகிறது; உண்ட உணவும் ஜீரணமாகிறது. ஆயினும் "அளவுக்கு விஞ்சினுல் அமிர்தமும் விஷம்" என்பதுபோல் அதிகமாக வெற்றிலை உபயோகித்தால் ஆகாரம் ஜீரணிக்காமல் மந்தத்தையுண்டு பண்ணும். தாம்பூலம் அடிக்கடி உபயோகிப்பதால் உமிழ்நீர் மிகுதியாக வெளிப்படுகிறது. உணவு ஜீரணிப்பதற்கு உமிழ்நீர் அவசியம். உமிழ்நீர் குறைந்தால் ஜீரணம் தடைப்படும் என்பதில் ஐயமில்லை.

"கைம்பெண்ணிற்கும், மதாசார ஒழுக்க முறைகளுக்கிசைந்து மணம் புரிந்து கொள்ளேனென்று பிரமச்சரிய விரதம் பூண்டு பரிசுத்த ஜீவிதம் செய்பவனுக்கும் சந்நியாசிக்கும் தாம்பூலம் பசுவின் மாமிசத்திற்கு ஒப்பாகும்" என்றும் கூறுவதால் இவர்கள் தாம்பூலம் தரிப்பின், ஆசை மிகுதியால் இவர்களின் ஒழுக்க நெறிகளுக்குக் கேடுவரும் என்பது புலனுகிறது.

தாம்பூலம் அடிக்கடி உபயோகித்தால் பல் இடுக்குகளிற் கறை படிந்துவிரைவில் பற்களின் மூலம் (வேர்) பலம் இழந்து பற்கள் விழ வாரம்பிக்கின்றன. நாக்குத் தடிப்பேறும்.

தாம்பூலத்தை அதிகமாய் உபயோகித்தால், தேகம், கண்கள், தலைமயிர், பற்கள், செவிகள் ஆகியவைகளின் பலம் குறையும்.

காய்ச்சலாய் இருப்பவர்களும், வாய் காய்ந்திருக்கும் போதும், பித்தத்தின் மூலம் உண்டான கெடுதியால் இரத்தத்தில் மாறுபடும் சிரமத் தாழ்வும் உண்டாயிருக்கிற பொழுதும், மூர்ச்சையடைகிறவர்களும், கண்ணோய்வாளர்களும், பலவீனர்களும் தாம்பூலம் உபயோகிக்கவே கூடாது.

நோய் கொண்டவரும், இளைப்புடையவரும், நாவறட்சிகொண்டவரும் தாம்பூலம் உபயோகிப்பார்களாயின் சில வேளைகளில் மரணாவஸ்தையையுங் கொடுக்கும்.

இதுகாறும் கூறியவற்றால் முற்றிலும் தாம்பூலத்தை நீக்கிவிட வேண்டுமென்று நேயர்கள் கருதலாகாது. காலை, உச்சி, மாலை ஆகிய மூன்று பொழுதுகளில் மட்டும் உபயோகிக்கலாம். காலையில் பாக்கு சிறிது அதிகமாகவும் சுண்ணாம்பு வெற்றிலை குறைவாகவும், உச்சியில் சுண்ணாம்பு சிறிது அதிகமாகவும். பாக்கு வெற்றிலை குறைவாகவும் இரவில் வெற்றிலை சிறிது அதிகமாகவும் பாக்கு சுண்ணாம்பு குறைவாகவும் சேர்த்து மென்று முன் ஊறிய ஜலத்தை உமிழ்ந்து விட்டுப் பின் அருந்துதல் நலம் பயக்கும். இதனால் மலப் பிரவிருத்தியுண்டாகும்; பசி எடுக்கும்; வாய் மணக்கும்.

"காலைப் பிளவதிகம்
கட்டுச்சி நீறதிகம்
மாலை யிலையதிக
மாயருந்தில் - வேலை நிலக்
காலை மலங்கழியும்
கட்டுச்சி தீபனமாம்
மாலை மணங் குலவும் வாய்"



---

கடவுள் மீது அழியா நம்பிக்கை இருப்பதென்றால் மனித வர்க்கம் முழுவதையுமே சகோதரராகவே கருதுவதாகும். சகல மதங்களையும் சமமாகக் கருதுவதாகும்.

— காந்திஜி

வம்பு பேசிப் பொழுதைப் பாழ்படுத்தாதே. கருதிய ஒன்றையே கூறுக. ஆகாதாயின் வாய் திறவாதே.

— பகவான் புத்தர்

பூச்சி உள்பட எதனிடமும் குறை காணாதே. பக்தி பெருக வேண்டும் என்று கடவுளை நீ அனுதினமும் பிரார்த்திப்பது போலவே, ஒருவரிடமும் குறை காணாமல் இருக்க வேண்டும் என்று வேண்டிக்கொள்.

— ஸ்ரீராமகிருஷ்ணர்

தன்னைத்தானே ஆட்சி செலுத்தாதவனை மற்றவர்கள் ஆட்சி செய்வார்கள்.

— அல்லாமா இக்பால்

# வளர்க குரு பக்தி

ஸ்ரீ V. கிருஷ்ணசாமி சர்மா

முக்கியமாக நம் சிறுவர் சிறுமியருக்குச் சொல்ல விரும்பு கிறேன்.

அக்ஞானத்தைப் போக்கும் பெரியவாள் நம் ஸ்ரீ காஞ்சி பெரியவாள். படாடோபம் ஏதும் விரும்பாமல், ஆஹார நியமாதி ஆசார அநுஷ்டானங்களில் அதிபவித்ரர் இந்த மஹான்கள்.

5000 ஆண்டுகட்கு முன் திருமூலத்தேவர் அருளிச் செய்த திருமந்திரம் பறை சாற்றுகிறது.

"குருட்டினை நீக்கும் குருவினைக்கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்
குருடும் குருடும் குழி விழுமாறே"

திருவள்ளுவ நாயனார் எடுத்துரைக்கிறார்.

"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லியவண்ணம் செயல்"

குருட்டினை நீக்கும் குரு நம் பெரியவாள்
சொல்லியவண்ணம் செய்து வருபவர் நம் பெரியவாள்

பகவானை ஸேவிக்கும் விஷயத்தில் "கால ஹரணம் கூடாது! இன்றே செய்க. உடனே செய்க என்று நம்மாழ்வார், நாம் உஜ்ஜீவிக்க, கதறுகிறார் :

"கெடுமிட ராயவெல்லாம் கேசவா வென்ன, நாளும்
கொடுவினை செய்யும்கூற்றின் தமர்களும்
குறுக்கில்லார்;

விடமுடை யரவில்பள்ளி விரும்பினான்
சுரும்பலற்றும்

தடமுடை வயலனந்த புரநகர்ப் புகுதுமின்றே!"
—திருவாய்மொழி 10—2—1

"மின்னின் நிலையில—மன்னுயிராக்கைகள்,
என்னுமிடத்து, இறை—உன்னுமின் நீரே"
—திருவாய்மொழி 1-2-2

மேற்படி பொன்னான வாக்கியங்கள் ஆசார்யனை ஸேவிக்கும் விஷயத்திலும் சாலப் பொருந்தும்.

# கால பைரவரும் காசிக் கயிறும்

காசியில் வைரவர், அங்குள்ள ஒலி முறைக்கேற்ப, பைரவர் என்றே குறிப்பிடப்படுகிறார். அவருடைய முழுப் பெயர் கால பைரவர் என்பதாகும்.

காலம் முடிந்தவுடன், அவரவர் வினைக்கேற்றபடி, முடிவையும் பலனையும் அருளுபவர் கால பைரவர்.

''விசுவேசர் கஞ்ச்'' என்னும் பகுதியில் காலபைரவர் கோவில் இருக்கிறது. இதனைப் ''பைரவநாத் மந்திர்'' என்றும் குறிப்பிடுவார்கள். இக் கோவிலில் காலபைரவரின் முகம் மட்டும் தெரியும் வண்ணம் உடலைக் கருப்புத் துணியால் மூடி வைத்திருப்பார்கள். பணம் செலுத்தினால் ''விசுவருபதரிசனம்'' என்ற பெயரில், கருப்புத் துணியை விலக்கிக் காட்டுவார்கள்.

பைரவருக்கு உகந்த நிறம் கருப்பு என்பது பொதுவான கருத்து. காசியில் உள்ள ஏனைய பைரவர் கோவில்களிலும் கரு நிறத் துணியே ஆடையாகப் பயன்படுத்தப்படுகிறது. நவக்கிரகங்களுள் ஒன்றான சனீசுவரனுக்கு ஞானோபதேசம் செய்தவர் பைரவர் என்று கருதப்படுகிறது. சனிக்கும் நிறம் கருப்பு என்றே நூல்கள் குறிக்கின்றன.

காலபைரவரின் பிரசாதமாக, கருப்புக் கயிற்றைக் கோவில் ''பண்டாக்கள்'' பக்தர்கள் கையில் கட்டுவார்கள்.

காசியில் இறப்பவர்களுக்கு எமதண்டனை கிடையாது என்றும், காலபைரவரின் தண்டனையே உண்டு என்றும் நூல்கள் கூறுகின்றன. காசி எல்லைக்குள் வேறேதும் மக்களுக்குத் துன்பம் தாராதவாறு காலபைரவர் காக்கிறார்.

காசிக் கயிற்றை பைரவர் முன்னிலையில் வைத்து அவர் அனுக்கிரகம் பெற்றுப் பிறகு கட்டிக் கொள்ளுவது மரபு.

காசிக் கயிற்றைப் பெரும்பாலும் ஆடவர் வலது கையிலும் பெண்டிர் இடது கையிலும் கட்டிக் கொள்ளுகின்றனர். ●

# பர்த்ருஹரியின் பொன் மொழிகள்

தஞ்சாவூர் ஸ்ரீ ஆர். முத்துகிருஷ்ணசாஸ்திரி

செல்வச் செருக்கினுல் சிலர் கசடறக்கற்றறிந்த பண்டிதர்களை யும், உபனிடதங்களின் உட் கருத்துக்களை உணர்ந்து ஜீவந் முக்திநிலை எய்தியவர்களையும் கூட அவமதிக்கக் கூடும். அவர் களை நோக்கிச் செய்யும் உபதே சம் இது:—

செல்வந்தர்களே! அரசர்களே! பலவற்றைக் கற்றுணர்ந்து பக் குவமடைந்த மகான்களை செல் வச் செருக்கினுல் எவ்விதத்திலும் அவமதிக்காதீர்கள். உங்கள் விருப்பம் போல் அவர்கள் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள்.

பணமே பெரியதென்று நீங் கள் கொண்டாடினுலும் அவர் களுக்கு அது புற் பூண்டு போல் சாரமற்ற ஒரு அற்பப்பொருளே. ஆதலால் அது அவர்களை ஒரு பொழுதும் எவ்விதத்திலும் தடை செய்யாது. மதம்பிடித்த யானைகளை தாமரை நூலினுல் கட்ட இயலுமா?

உலகங்களை யெல்லாம் படைத்த பிருஹ்மதேவனுக்கு ஹம்ஸங்களிடம் கோபம் வந் தால், அவைகள் கூடிக்குலாவி விளையாடுமிடமாகிய தாமரை ஓடைகளை அவர் வற்ற வைக்க லாமல்லாமல், அவைகளிட முள்ள பாலையும் நீரையும் பிரிக் கும் திறமையை அழிக்க முடி யுமா? அதுபோல் உங்களுக்கு பண்டிதர்களிடம் வெறுப்புத் தோன்றினுல் அவர்களுடைய வீடு, உணவு, உடை முதலிய வற்றைப் பிடுங்கிக் கொண்டு அவர்களை ஊரைவிட்டே துரத்த லாமல்லாமல் அவர்களுடைய் அறிவையும் அதனுல் உண்டான புகழையும் உங்களால் ஒரு பொழு தும் அழிக்க முடியாது.

அவர்களுடைய கல்வியே அவர் களுக்கு எங்கும் எல்லாவற்றை யும் தேடித்தரும் என்பதை விளக் கக் கல்வியின் பெருமைகளைப் பல வானுக வர்ணிக்கத் தொடங்கு கின்ருர்.

தோள்வளை போன்ற ஆபர ணங்களோ, சிறந்த மாலைகளோ, வாசனையுள்ள சந்தனமோ, மண முள்ள மலர்களோ மனிதனுக்குச் சிறந்த அணிகள் அல்ல. இவை யெல்லாம் விரைவில் நசிக்கக் கூடியவை; மாசற்ற சிறந்த கல் வியே மனிதனுச்குச் சிறந்த ஆப ரணம். அதுவே யாருக்கும் புலப் படாமல் காப்பாற்றப்பட்டு வரும் பொருள். இன்பம் புகழ் முதலியவற்றை அளிப்பதும் அதுவே. கல்வியே ஆசிரியர் களுக் கெல்லாம் ஆசிரியர். அயல் நாட்டில் உறவினர் போல் உதவி புரிவதும் கல்வியே. அது வேண் டியவற்றை யெல்லாம் வாரி வழங்கும் தேவதை போன்றது. வித்வானே அரசர்கள் அவை களில் கௌரவிக்கப்படுகின்ருன். பணம் படைத்தவன் அல்ல. ஆத லால் இவ்வித கல்வியற்றவன் ஆடுமாடு போன்ற மிருகங்களுக் சமம்.

ஒருவனிடம் பொறுமை என்ற நற்குண மிருந்தால் அவனுக்குக் கவசம் தேவையில்லை. கவசம் உடலைக் காப்பது போல் பொறுமை என்ற குணம் உடல் உள்ளம் எல்லாவற்றையும் காப்பாற்றும். சினம் என்ற தீய குணம் இருப்பின் விரோதிகள் எதற்கு? அவர்களால் நேரும் துன்பங்களை சினமே அழித்து விடும்.

அருகில் பங்காளி ஒருவனிருந்தால் வேறு நெருப்புத் தேவையில்லை. சிறந்த நண்பன் ஒருவனிருந்தால் உயர்ந்த மருந்துகள் தேவையில்லை. துஷ்டர்கள் அருகில் இருப்பின் கொடிய சர்ப்பங்கள் வேண்டாம். லஜ்ஜையிருந்தால் மற்ற ஆபரணங்கள் எதற்கு? சிறந்த கவியாக இருந்தால் அரசு எதற்கு? இவ்விதமே மாசற்ற கல்வி இருந்தால் பொன் வெள்ளி முதலிய பொருள்கள் எதற்கு? எல்லாவற்றையும் கல்வியைக் கொண்டே ஆங்காங்கு அடைய முடியும் என்பதாம்.

அறிஞர்கள் அனைவரிடமும் பழகும் விதத்தை எடுத்துக் கூறி உயர்ந்த உலக வாழ்க்கை அவரிடமே நிலைபெற்றிருக்கும் என்பதை விளக்குகின்றார். உறவினர்களிடம் அவர்கள் நோக்கத்திற்கு முரண்படாமலிருத்தல், பணியாட்களிடம் தயை, துஷ்டர்களிகளிடம் எப்பொழுதும் வேறுப்பு, நல்லவர்களிடம் நட்பு, அரசர்களிடம் நீதி வழுவாமலிருத்தல் பண்டிதர்களிடம் எதையும் மறைக்காமல் உள்ள படியே வெளியிடுதல், விரோதிகளிடம் வலிமையுடன் போராடுதல், பெரியோர்களிடம் பொறுமையுடனிருந்தல், பெண்களிடம் மன உறுதியுடனிருத்தல் முதலிய கலைகளில் எவர் நிபுணர்களோ அந்த 'அறிஞர்களிடமே உலக வாழ்க்கை நல்ல முறையில் அமைந்திருப்பதாகக் கருத வேண்டும்.

இவ்வித பண்பாடுகள் நிறைந்தவர்களைப் போற்றி அவர்களுடன் இடைவிடாமல் பழகி வருவதையே ''ஸத்ஸங்கம்'' என்பர். இந்த ஸத்ஸங்கம் எவ்வித நன்மையைத்தான் அளிக்காது? தெரிந்தால் சொல்லுங்கள். இதனால் ஒருவனுடைய மதியில் உள்ள மாசு மடியும். வாக்கில் உண்மை உலாவும். மக்களிடம் மதிப்பு உண்டாகும். பாவங்கள் பறக்கும். எல்லா திசைகளிலும் புகழ் பரவும்.

அண்டியவர்களுக்கு இவ்விதம் பலவித நன்மைகளை அளித்து வரும் புண்ணியசாலிகளான பண்டிதோத்தமர்கள் எப்பொழுதும் இவ்வுலகில் விளங்கிக் கொண்டே இருக்கின்றனர். அவர்களுடைய சதையும் நரம்புமாகவுள்ள இந்த பௌதிக உடல் நசிந்தாலும் அவர்களுடைய புகழாகிற உடலுக்கு அழிவே இல்லை. ஆதலால் அவர்கள் இப்பொழுதும் நம்மிடையில் வாழ்ந்து கொண்டே இருக்கின்றனர் என்பதாம்.

○

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: தொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17